*Kumaran̲*

*Āram 18, muttu 15*

*November 28, 1940*

Record no. 313

REGD. NO. M. 1823. 12 பக்கங்கள். KUMARAN WEEKLY

சந்தா விவரம்
உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு
ஒரு 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.
நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலிய வைகளுக்கு இஞ்ச் ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்த மானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத் துக்கு மானேஜருக்கு எழுதவும்.

வியாழன் தோறும் வெளிவரும் — மாதப் பதிப்பும் சேர்ந்தது — PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 18. | காரைக்குடி, விக்கிரம-ஞு கார்த்திகை-மீ 13-உ (28—11—40) | முத்து 15

ஸ்ரீ மகாதேவ தேசாய் பின் வருமாறு ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்:—

பண்டித ஜவஹர்லால் சென்ற வருஷம் சீனுவுக்குச் சென்றிருந்ததால் அதற்குப் பிரதியாக இந்தியாவுக்குச் சீனத் தலைவர்கள் வந்து தங்கள் நல்லெண்ணத்தைத் தெரிவிக்க எண்ணினர். இதற்காக தாய் சீதோவின் தலைமையில் ஒரு தூது கோஷ்டி இங்கு வந்திருக்கிறது.

### தாய் சீதோவின் ஊழியம்

நல்லெண்ணத் தூதுகோஷ்டித் தலைவரான தாய்சீதோ சீனப் புரட்சி இயக்கத்தில் விசேஷமாகக் கலந்து கொண்டிருக்கிறார். அவர் டாக்டர் சன்யாட்சென்னுக்கு வலக்கை போலிருந்தார். டாக்டரின் கொள்கைகள் எங்கும் பரவ அரும்பாடு பட்டார். 1928-ம் வருஷம் அக்டோபரில் சீனுவில் சாங்கேஷேக் சீனத் தேசீயக் கவர்ன்மெண்டு தலைவராக விருந்த போது தாய்சீதோ முக்கியமான பதவியில் இருந்தார். இப்போது சாங்கே ஷேக்கிடமிருந்து அவர் மகாத்மாவுக்கு ஒரு விசேஷச் செய்தி கொண்டு வந்திருந்தார்.

### ஆஸ்ரமத்தில் வரவேற்பு

சேவா கிராமத்திலுள்ள காந்திஜியின் மண் குடிசையில் தாய் சீதோ தமது கோஷ்டியுடன் நுழைந்ததும், காந்திஜி நூற்ற நூலைக்கொண்டு செய்யப்பட்ட மாலைகளை அவர்களுக்குச் சூட்டி ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தி அவர்களை வரவேற்றார். தாய் சீதோ தலையில் ஒன்றும் அணிந்துகொள்ளாமல் சீன உடையில் அந்த வரவேற்பை ஏற்றுக்கொண்டார். பிறகு மகாத்மாவிடம் சாங்கேஷேக் செய்தியைக் கொடுத்து விட்டு காந்திஜிக்கு எதிரில் போடப்பட்டிருந்த ஆஸனத்தில் அமர்ந்தார்.

"நாங்கள் மிக்க கஷ்டமான நிலையில் இருக்கிறோம். கஷ்டத்திலிருந்து விடுபட எங்களுக்கு ஒரு வழிகாட்ட வேண்டும். இவ்விஷயத்தில் வெற்றி யடைந்து விட்டால் மட்டும் போதாது. மேற்கொண்டு பற்பல தேசத்தாரிடையிலும் நிரந்தர சமாதானம் நிலவும் வழி சொல்ல வேண்டும்"

என தாய் சீதோ கேட்டார். அவர் மத உணர்ச்சி அதிகமுடையவர் எனத் தெரிகிறது. வார்தாவில் சேத்ஜி கட்டியுள்ள கோயிலைக் கண்டு அவர் பரவசமடைந்தார். அவர் கையில் ஜபமாலை இருக்கிறது.

காந்திஜீ நூல் நூற்றுக் கொண்டே அவரது க்ஷேமத்தை விசாரித்தார்.

### மகாத்மாவின் ஆசி

நீங்கள் இப்போது உயிருக்கே போராடி வருகிறீர்கள். அவ்விதமே நாங்களும் போராடி வருகிறோம். உங்கள் நாடு புராதனமானது. எங்கள் நாடும் அவ்விதமே பழமையானது. ஆனால் உங்கள் நாட்டைவிட எங்கள் நாடு சிறிது தான். நம்மிருவருக்கும் பொதுவாக பல அம்சங்களிருக்கின்றன; என்னைப் பொறுத்தமட்டில் நான் பல நாளாகச் சீனரை நன்கறிவேன். எனக்கு சீனர்கள் அந்நியரல்ல.

## "உலகம் உய்விக்க ஒரு வழி சொல்லுங்கள்"

### மகாத்மாவுக்கு சீனப் பிரமுகர் வேண்டுகோள்

### ஆப்பிரிக்காவில் மகாத்மா கண்ட மருந்து

நீங்கள் தற்சமயம் உயிருக்கே போராடி வந்தாலும் சுதந்திரத்தை நிலைநிறுத்த நீங்கள் அனுஷ்டிக்கும் வழிக்கும் நாங்கள் அனுஷ்டிக்கும் வழிக்கும் வித்தியாசமிருக்கிறது. நீங்கள் அனுஷ்டிக்கும் வழியை நான் குறை கூறுவதாக நினைக்கவேண்டாம். தற்காப்புக்காக நீங்கள் அனுஷ்டிக்கும் வழி புராதனமானது. நான் ராஜீயத் துறையில் இதுவரை உலகமறியாத ஒரு வழியை அனுஷ்டித்து வருகிறேன். உங்கள் மூலமாக நான் அனுஷ்டிக்கும் வழியைத் தான் சீனர்களுக்கு எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். அதுவே நான் செய்யக்கூடிய கைங்கர்யம்.

### நான் கண்ட மருந்து

நான் இப்போது அநுஷ்டிக்கும் மார்க்கத்தை முதல் முதலில் நான் 1906-ம் வருஷம் தென்னுப்பிரிக்காவில் கண்டுபிடித்தேன். இந்த மருந்து அப்போது கிடைக்காமலிருந்தால் டிரான்ஸ்வாலி லிருந்த இந்தியர்கள் மாண்டு மறைந்து போயிருக்க வேண்டியது தான். வேறு வழியொன்றும் பலிக்காது போனபின் கஷ்டங்களிலிருந்து விடுபட நான் இந்தப் பரிகாரத்தைக் கண்டுபிடித்தேன். 1920-ம் வருஷத்திலிருந்து இந்த முறையை வெற்றியுடன் இங்கு அநுஷ்டித்து வருகிறோம். காங்கிரஸ் அதனால் பலம் பெற்றிருக்கிறது; சுருங்கச் சொன்னால், சீன சோல்ஜர்களைப் போல வீரத்துடன் உயிரைக் கொடுக்கக் காங்கிரஸ்காரர்கள் தயாராக விருக்கின்றனர். எதிரிக்கு எவ்வித தீங்கும் இழைக்காமல் தங்கள் உயிரைத் தியாகம் செய்து சுதந்தரத்தைக் காக்கக் காங்கிரஸ் காரர்கள் சித்தமாக விருக்கின்றனர். பிறருக்குத் துன்பம் இழைக்காமலே நாம் தியாகம் செய்து பாமர மக்களுக்கு ஒரு வீரத்தை ஊட்டி விட்டால் நமக்குச் சுதந்தரம் கிட்டிவிடுவதோடு யுத்தத்தை ஒழிக்க நாம் உலகுக்கே ஒரு வழிகாட்டியவர்களுமாவோம்;

இந்த இயக்கத்தை நீங்கள் சிரத்தையுடன் கவனித்து வரவேண்டும். சீனர்கள் சார்பாக நீங்கள் அதற்கு ஆசி கூறவேண்டும். இந்த சாத்வீக முறையில் சுதந்தரத்தைப் பெறும் வரையில் நான் அதிகமாக ஒன்றும் சொல்ல விரும்பவில்லை.

### சர்க்காவின் பெருமை

விருந்தினரை உபசரிக்கையில் நான் இவ்விதம் நூற்றுக்கொண்டே யிருப்பது மரியாதை யல்லவென சாதாரணமாக நினைக்கக்கூடும். ஆனால் நான் காரணமில்லாமல் அவ்விதம் செய்யவில்லை. இந்த ராட்டினத்தை உங்களுக்கு சுழற்றிக் காட்டுவதோடு இதன் மூலம் எனக்கு சாத்வீக ஆற்றல் ஏற்படும் விதத்தையும் உங்களுக்குக் காட்ட விரும்புகிறேன். தேசியக்கொடியில் இந்த ராட்டினத்துக்கு மத்யஸ்தானம் அளிக்கப்பட்டிருப்பதை நீங்கள் கவனிக்கலாம். அது தான் இங்குள்ள பாமர மக்களிடையே ஒரு அந்நியோந்நியத்தை ஏற்படுத்துகிறது என்றார்.

### புதிய உற்சாகம்

நல்லெண்ணத் தூது கோஷ்டித் தலைவர் மகாத்மாவின் செய்தியைக் கேட்டு தங்களுக்கு மிக உற்சாகம் ஏற்பட்டிருப்பதாகவும் மகாத்மாவின் சாத்வீக வழியைப் பற்றியும் அவர் சாதித்தவைகளைப் பற்றியும் பத்திரிகைகளில் படித்தறிந்திருந்தாலும், நேருக்கு நேராகவே இன்று காந்திஜியிடமிருந்து விஷயங்களை அறிந்ததற்கு என்றும் அவருக்குக் கடமைப்பட்டிருப்பதாகவும், சந்தர்ப்பங்கள் பல்வேறு விதமாக விருப்பதால் முறைகளும் பலவிதமாக விருப்பதாகவும், பலாத்காரத்தை தாங்கள் எதிர்த்துப் போராட வேண்டியிருப்பதாகவும், ஆனால் இப்போது தங்கள் கிராமங்களிலும் ராட்டினம் சுற்றப்படுவதாகவும் நூற்றுக்கு 90 வீடுகளில் அங்கு ராட்டினம் சுழலுவதாகவும், ஆனால் அந்த ராட்டினங்கள் பழைய மாதிரியானவை யென்றும், சீனுவில் பெரிய தொழிற்சாலைகள் பல வெடிகுண்டால் நாசமாகிவிட்டனவென்றும், ஆகவே மீண்டும் வெடிகுண்டால் தகர்க்க முடியாத கைராட்டினத்தின் உதவியை நாடவேண்டியிருப்பதாகவும், மகாத்மாவின் ராட்டினம் தங்களுக்கு ஒரு உற்சாகம் அளிப்பதாகவும் கூறினர்.

மகாத்மா 'தனுஸ் தக்ளி' என்ற புதிய தக்ளியில் நூற்றுக் காண்பித்தார். தாய் சீதோவுக்கு அதைப் பரிசாகவும் அளித்தார். ஆனால் அவர் காலையிலேயே அதை விலை கொடுத்து வாங்கிவிட்டிருந்தார்.

### மகாத்மாஜிக்கு வாழ்த்து

தூது கோஷ்டியினர் மகாத்மாவிடம் விடைபெற்றுக் கொள்ளுமுன்,

"இந்தியாவும் சீனுவும், ஏன் மனித வர்க்கத்தினர் அனைவருமே நல்வாழ்வு அடைவதற்குத் தாங்கள் நெடுநாள் வாழ்ந்திருக்க வேண்டும். தங்கள் குடும்பமும் தாங்களும் சகஜீவிகளாக விருக்க நாங்கள் பிரார்த்திக்கிறோம்" எனத் தலைவர் கூறினர்.

(12-ம் பக்கம் 4-ம் பத்தி பார்க்க)

## சென்னை ரேடியோ

ஒலி பரப்புகள்:— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1-30 முதல் 3 வரை மாலை 4 முதல் இரவு 10-30 வரை.

தமிழில் செய்திகள்:— காலை 7-45; பிற்பகல் 2-45, இரவு 7-35.

### நவம்பர் 28உ வியாழன்

2·00—2·30 வி. எஸ். பாலசுப்ரமண்ய ஐயர் வயலின்
5·00—5·45 டி. பெருமாள் நாயுடு க்ளாரினட்
6·05—6·30, 9·30–10·00 ஸ்ரீமதி பத்மா நரசிம்மன் பாட்டு
6·30—6·45 ஐந்தாம் படை—நாடகம்
7·50—8·30, 8·45—9·15, 8·30—8·45 திருச்சியிலுள்ளபடி லாகூரில் உள்ளபடி.

★

### 29உ வெள்ளி

1·35 வி. எஸ். சோமசுந்தரம் புல்லாங்குழல்
5·00—5·45, 8·30—9·00 கோமதி சங்கரய்யர் வீணை
6·05—6·30, 6·45—7·00 காஜா மொஹிதீன் ஹிந்துஸ்தானி பாட்டு
6·30 எஸ். ஆர். வெங்கடேசனும் கே. வி. ஜானகியும் பாட்டு
7·50—8·30, 9·45–10·30 அத்தாங்கி ஸ்ரீ ராமமூர்த்தி. பாட்டு

★

### 30உ சனி

5·15—6·00, 6·30—7·00 ஸ்ரீமதி கமலகுமாரி பாட்டு
7·50 மைசூர் கே. வாசுதேவாச்சாரியார் பாட்டு

★

### டிசம்பர் 1உ ஞாயிறு

1·35—2·00, 4·00—4·30 கே. மகாதேவன் பாட்டு
2·00—2·30, 5·00—5·45 ஆர். ஆர். கேசவமூர்த்தி வயலின்
6·30—7·00, 7·50—8·30 எம். எம். தண்டபாணி தேசிகர் பாட்டு
8·30—9·00, 9·30—9·45 ஸ்ரீமதி டி. எஸ். சங்கரி பாட்டு

★

### 2உ திங்கள்

1·35 குமாரி எம். பாலம் பாட்டு
5·00 இந்திர கோபால செட்டி வயலின்
6·05—6·30, 9·45–10·30 செந்தாமரைக் கண்ண ராமானுஜ தாசர், கோவிந்த ராமானுஜ தாசர் பாட்டு
7·00 சங்கீத சர்ச்சை
7·50 திருச்சியில் உள்ளபடி

★

### 3உ செவ்வாய்

2·00 ஆர். சாம்பசிவன் பாட்டு
5·00—5·45, 9·30–10·00 ஸ்ரீமதி கே. லக்ஷ்மிபாய் வீணையும் பாட்டும்
6·05—6·30, 6·45—7·00 டி. குப்பு ராவ் கிளாரியனெட்
6·30 அஞ்சா நெஞ்சன்—வி. எஸ். ராமகிருஷ்ணன் எழுதியது
7·50 மன்னார்குடி ராஜகோபால் பிள்ளை பாட்டு

★

### 4உ புதன்

1·35 எம். ஜகன்னாத ராவ் வீணை
5·00—5·45, 7·50—8·30 என். எஸ். ராஜண்ணா பிள்ளை நாகஸ்வரம்
6·30—7·00, 8·30—9·00 ஸ்ரீமதி எம். எஸ். சரோஜனி பாட்டு

★

### 5உ வியாழன்

2·00 எஸ். கோபாலகிருஷ்ணய்யர் வயலின்
5·00 குருவப்ப நாயுடு ஸாக்ஸோ போன்
6·05—6·30, 9·30–10·00 குமுதினி பாட்டு
6·30 படிக்காசு புலவர்—நாடகம்
7·50 திருச்சியில் உள்ளபடி

## பூமிக்குள் மறைந்திருக்கும் புதையல்கள்

### எடுக்க பல கம்பெனிகள் ஏற்பாடு

கோகோஸ் தீவுகளைப்பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். அத்தீவில் மறைந்துள்ள புதையலைப்பற்றியே அதிகமாகப் பேசப்படுகிறதென்பது குறிப்பிடத்தக்கது.

கோஸ்டாரிகா கடற்கரையை அடுத்து 400 மைல் தூரத்திற்கப்பால் உள்ளது கோகோஸ் தீவு. அங்கு மலைகள் அதிகம். எங்கு பார்த்தாலும் பாறைப் பிரதேசங்களே. அதுவுமின்றிப் பயங்கரமான புதர்கள் நிறைய உண்டு. குன்றுகளை மறைத்து விளங்கும் அப்புதர்கள். அங்குள்ள புதையலைக் கண்டுபிடிக்க முயன்றவர்கள் பலர். ஒரு காலத்தில் அந்தப் பிரதேசம் கப்பற் கொள்ளைக்காரர்களின் தலைமைக் காரியாலயம் உள்ள ஸ்தலமாக இருந்திருக்கிறது. டேவிஸ் எனும் காட்டுமிராண்டித் தலைவன் 15 லட்சம் மதிப்புடைய செல்வத்தை அங்கு புதைத்து வைத்திருந்ததாகச் சொல்லப்பட்டது. வெள்ளி, தங்கக்கட்டிகளை ஏற்றிவந்த ஓர் ஸ்பானியக் கப்பல் அங்கு கொள்ளையடிக்கப்பட்டது. ஒரு காப்டன் வெள்ளிக்கட்டிகளை வெள்ளீயம் என்று கருதி, அங்கே போட்டுவிட்டதாகவும் சொல்லப்படுகிறது. பொதுவாக அந்தத் தீவில் மறைவாக 200 லட்சம் மதிப்பிடத்தக்க ஐஸ்வரியம் இருப்பதாகக் கருதப்பட்டது.

அந்தப் புதையலைக் கண்டுபிடிக்க பல தடவைகள் முயற்சிக்கப்பட்டன; ஆனால், பலன் ஏற்படவில்லை. ஸர் மால்கோல்ம் காம்பெல் என்பவர் இடத்தைக் கண்டுபிடித்தார். ஆனால், பணம் எதுவும் அகப்படவில்லை. 1927ல் அந்தப் புதையலைக் கண்டுபிடிப்பதற்காகவே ஓர் கம்பெனி ஆரம்பிக்கப்பட்டது. அதன் ஆதரவின் கீழ் ஓர் கோஷ்டியார் அந்த இடத்துக்கு ஆராய்ச்சி செய்யப் போனார்கள். பூமியைத் தோண்டினர். இரவு பகல் ஓயாமல் பல கூலிகள் அந்த வேலையைச் செய்தனர். கீழே ஓர் வகையான கட்டிடம் காணப்பட்டது. சில முக்கியமான பொருட்களும் அகப்பட்டன. ஆனால் தங்கக் கட்டிகள் அகப்படவில்லை. அவை அங்கு தான் எங்கேயோ மறைந்திருக்கவேண்டும்.

மற்றோர் அதிசயமான சம்பவம் இங்கு குறிப்பிடத்தக்கது. 'ஸ்டாரி கிரவுன்' எனும் கப்பல் அநேக ஆண்டுகளுக்கு முன்பு மெல்போர்னிலிருந்து லண்டனுக்குப் புறப்பட்டது. அதில் தங்கம் ஏற்றப்பட்டிருந்தது. ஆனால், அது லண்டனை அடையாததினால் அது கடலில் மூழ்கியிருக்கவேண்டுமென்று கருதப்பட்டது. அதன் உண்மை 20 வருடங்களுக்குப் பிறகு வெளிப்பட்டது. அது பனிக்கட்டிக்குள் மறைந்திருக்கிறதென்ற விஷயம் பிறகுதான் தெரியவந்தது. அதில் தங்கக் கட்டிகளும் அப்படியே இருந்தனவாம். அவைகளை அப்புறப்படுத்துவதற்காக மற்றோர் கப்பலில் சிலர் புறப்பட்டனர். அந்தக் கப்பல், பனிக்கட்டியால் தாக்கப்பட்டு உடைந்தது. அதில் உள்ள சிப்பந்திகளில் பலர் இறந்தனர். ஆனால், கேப்டனும், மற்றொருவரும் ஏற்கனவே தங்கத்துடன் பனிக்கட்டிகளிடையே ஆக்கிரமிக்கப்பட்டிருக்கும் கப்பலுக்குச் சிரமமுடன் சென்றனர். மழை காலம் வந்தது. காப்டனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. தன்னைத்தானே சுட்டுக்கொண்டு இறந்துவிட்டார். ஆனால், மற்றொருவர் மாத்திரம் மிகவும் சிரமமுடன் தப்பித்துவந்தார். அவரால் தங்கத்தைக்கொண்டுவர முடியவில்லை. ஆனால், அவரும் முடிவில் இறந்துவிட்டார். தங்கம் உள்ள அக்கப்பல் இன்னும் அப்பனிக்கட்டி 'மலை'க்குள் மர்மமாகவே சிக்கிக் கொண்டிருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

மேற்கு இந்தியத் தீவுகளில் ஹாய்டி என்ற ஓர் இடம் உண்டு. அங்கே சுமார் நூறு வருடங்களுக்கு முன்பு கிரிஸ்டோபி எனும் அந்தத் தீவுச் சக்கரவர்த்தி, வெறும் கற்களைக் கொண்டே மிகப் பெரியமாளிகையைக் கட்டினான். அது சீர்குலைந்து காணப்படுவதை இன்றும் பார்க்கலாம். அந்த மாளிகையின் கீழ் பாதாள அறைகளில் அந்தச் சக்கரவர்த்தி ஏராளமாகத் தங்கத்தைச் சேர்த்து வைத்திருந்தான் என்று நம்பப்படுகிறது. அந்தப் புதையல் வெகுகாலம் வரையில் கண்டுபிடிக்கப்படவேயில்லை. பலர் வருடக்கணக்காக அதைக் கண்டு பிடிக்க முயன்றனர். பலன் இல்லை. கடைசியில் ஒருவன் 18-வது நூற்றுண்டில் இருந்த தங்க நாணயங்களை வைத்துச் சூதாடினான். அவனை உடனே அந்த நாணயத்தைப்பற்றி விசாரித்தார்கள். பிரஸ்தாபப் புதையலைத் தான் கண்டுபிடித்துவிட்டதாக அவன் கூறினான். அவனைப் பிடித்துப் பல கடுமையான தண்டனைக்குள்ளாக்கி அப்புதையல் இருந்த இடத்தைக் காட்டும்படி அதிகாரிகள் வற்புறுத்தினர். எதையும் சொல்ல அவன் கண்டிப்பாக மறுத்துவிட்டான். கடைசியில் எப்படியோ தந்திரமாகத் தப்பித்து ஓடிவிட்டான்.

போகோடாவில் உள்ள 'தங்க ஏரி' முக்கியமானது. அதன் அடியில் 3,000 லட்சம் மதிப்பிடத்தக்க சம்பத்து மறைந்திருப்பதாக நம்பப்படுகிறது. ஆதிகாலத்தில் அநேகர் விலையேறப் பெற்ற பொருட்களைப் போட்டுவந்ததாகவும், இவ்விதம் குறைந்தது 500 வருடங்கள் அனுஷ்டிக்கப்பட்டிருக்கலாம் என்றும் கருதப்படுகிறது.

[11-ம் பக்கம் பார்க்க]

## விற்பனைப் புத்தகங்கள்

### மலேயாவின் தோற்றம்

ஸ்ரீமான் பெ. நா. மு. முத்துப்பழனியப்ப செட்டியார் J. P. இயற்றியது.

விலை ரூ 3. தபாற் செலவு வேறு.

கிடைக்குமிடம்—

குமரன் ஆபீஸ், காரைக்குடி.

பெ.நா.மு. முத்துப்பழனியப்ப செட்டியார், ஆத்தங்குடி.

### தனவணிகர் தன்மை

RM. SM. கதிரேசனார் இலங்கை ககர் வானொலியில் நிகழ்த்திய விரிவுரை நூல் இது. சுவாமி விபுலாநந்தர் அணிந்துரையும், R. P. சேதுப்பிள்ளை அவர்கள் முன்னுரையும், காமக்கல் இராமலிங்கர் சிறப்புப்பாயிரமும் இந்நூலில் இலங்குகின்றன.

விலை அணா 12. தபாற் செலவு அணா 2.

கிடைக்குமிடம்:

குமரன் ஆபீஸ், காரைக்குடி.



## திருச்சி ரேடியோ

ஒலிபரப்புகள்:— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1-30 முதல் 3 வரை; மாலை 5 முதல் இரவு 10 வரை.

தமிழில் செய்திகள்:— காலை 7-45; பிற்பகல் 2-45; இரவு 7-35.

### நவம்பர் 28உ வியாழன்

1·35—2·00 எஸ். கே. நாராயண சாமிப் பிள்ளை பாட்டு
5·15—6·00 மைசூர் ரங்கப்பா புல்லாங்குழல்
7·15—7·30 'ஸரிகபாக'—ஒரு சங்கீத நாடகம்
7·50—9·20 சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை பாட்டு, பாபா வெங்கடராமய்யர் வயலின், உமையாள்புரம் கணேசய்யர் மிருதங்கம்.

★

### 29உ வெள்ளி

1·35 சித்தூர் ராமச்சந்திரன் பாட்டு
2·00 ஸ்ரீமதி எஸ். கே. கண்ணம்மாள் வீணையும் பாட்டும்
5·15—6·00, 7·50—8·30 டி. என். ஆர். நடராஜ சுந்தரம் நாகஸ்வரம்
6·05—6·30, 8·40—9·20 ஸ்ரீமதி லலிதாங்கி பாட்டு

★

### 30உ சனி

7·00 புத்தக விமரிசனம்: கே. எஸ். சுப்ரமண்யம்
7·50 மதராசில் உள்ளபடி

★

### டிசம்பர் 1உ ஞாயிறு

5·15—6·00, 7·50—8·30 ஸ்ரீமதி நீலம்மா கடம்பி வீணையும், பாட்டும்
6·05—6·30, 8·30—9·20 வி. கே. ராகவ மேனன் பாட்டு

★

### 2உ திங்கள்

1·35 கே. வி. தியாகராஜன்: முத்துத் தாண்டவர் பதங்கள்
5·15 சிதம்பரம் வி. கோவிந்தசாமி பிள்ளை நாகஸ்வரம்
7·50 ரேடியோக் கச்சேரி: ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் பாட்டு, டி. குருராஜப்பா வயலின், டி. எ. மீனாக்ஷிசுந்தரம் மிருதங்கம்.

★

### 3உ செவ்வாய்

1·35 ஸ்ரீமதி எஸ். என். நாகரத்தினம்மாள் பாட்டு
5·15 எம். ஸபாபதி ஐயர் வீணை
7·00 இலக்கிய வாசகம்: வில்லிபாரதம், ஆர். கந்தஸ்வாமியார்
9·00 ஊர்மிளா—நாடகம்

★

### 4உ புதன்

1·35 ஸ்ரீமதி வி. எஸ். சாரதாம்பாள் பாட்டு
5·15—6·00, 7·50—8·30 எம். பாலகிருஷ்ணய்யர் வயலின்
6·05—6·30, 8·45—9·20 கே. வரதாச்சாரியார் பாட்டு
8·30 நண்பனின் மனைவி—சிறுகதை

★

### 5உ வியாழன்

1·35 என். சுவாமிநாதய்யர் புல்லாங்குழல்
5·15 ஸ்ரீமதி எஸ். கோமளம், ஸ்ரீமதி எஸ். ஸ்ரீநிவாஸ் பாட்டு
7·00 திருவள்ளுவரின் தனிச்சிறப்பு:பேச்சு டி. கே. சிதம்பரநாத முதலியார்
7·50 ரேடியோக் கச்சேரி, காரைக்குடி சாம்பசிவ ஐயர் வீணை, காரைக்குடி முத்து ஐயர் மிருதங்கம்

○

### திருச்சி ரேடியோவில் "திருவண்ணாமலை தீபம்"

சிறிய "நடக்கும் நிலையம்" டிசம்பர் 12உ யன்று திருவண்ணாமலை செல்கிறது. தீப உற்சவக் காட்சி அவ்விடத்திலிருந்தே தமிழிலும் ஆங்கிலத்திலும் வர்ணிக்கப்படும். இந்த வர்ணனைகள் திருச்சி நிலையத்தின் மூலம் ஒலிபரப்பப்படும். இந்த நிகழ்ச்சியை மதராஸ் நிலையம் அஞ்சல் செய்யும், ஆங்கில வர்ணனையை பம்பாய், டெல்லி, கல்கத்தா உட்பட எல்லா நிலையங்களும் அஞ்சல் செய்யும்.



(சென்ற வாரத் தொடர்ச்சி)

நமது கைத்தொழில்கள் ஒரு சில டிரஸ்டுகளின் ஆதிக்கத்தில் அடங்கிவிட்டதாக மட்டும் இல்லை; ஒரு சிலருடைய ஆதிக்கத்திலேயே அடங்கி வருகிறது. சணல் தொழிலில், 132 பேர் 271 டயரக்டர் பதவிகளைத் தாங்கி வருகிறார்கள்—இவர்களில் 10 பேர் மட்டும் 87 பதவிகளை வகிக்கிறார்கள். தேயிலைக் கம்பெனிகளில் 66 தனி நபர்கள் 389 டயரக்டர் பதவிகளை வகிக்கின்றார்கள். இவர்களில் 12 பேர்களுக்கு 184 பதவிகள்—மூன்று பேர்களுக்கு மட்டும் 70 பதவிகள்.

டிரஸ்டுகளிலும் ஒரு சிலருக்குப் பெரும்பாலான பதவிகள் இருக்கின்றன. ஆண்ட்ரூஸ் யூல் கம்பெனியைச் சேர்ந்த 52 ஸ்தாபனங்களின் 172 டயரக்டர் பதவிகளை 47 பேர் வகித்து வருகின்றார்கள்—இவர்களில் ஐவருக்கு 97 பதவிகள். மார்ட்டின் கம்பெனியைச் சேர்ந்த 24 ஸ்தாபனங்களில் 123 டயரக்டர் ஸ்தானங்கள் 29 பேர்கட்கு—இவர்களில் மூவருக்கு மட்டும் 62 டயரக்டர் பதவிகள். இப்படியே இன்னும் பல உதாரணங்கள்.

இன்னும் பல்வேறு டிரஸ்டுகளுக்குப் பொதுவாகப் பல டயரக்டர்கள் இருக்கின்றனர். இதனால் ஆதிக்கம் செலுத்துவோர் தொகை இன்னும் குறைகிறது. நமது தேசத்திலுள்ள முக்கியமான ஐநூறு ஸ்தாபனங்களை 2000 டயரக்டர்கள் நிர்வகித்து வருகிறார்கள். இந்தப் பதவிகளை வகிப்போர் தொகை 850 நபர்கள் தாம். ஆனால் இவற்றில் 1000 டயரக்டர் பதவிகளை 70 பேர்கள் மட்டும் வகிக்கின்றனர்—மீதமுள்ள 1000 பதவிகளை 780 பேர் வகிக்கின்றனர். எல்லாவற்றிற்கும் மேலாக 10 பேர் 300 டயரக்டர் பதவிகளை வகிக்கின்றனர்—இவர்கள் தான் நமது கைத்தொழில் பொருளாதார நிலையின் ஆட்சி கர்த்தாக்களாக இருக்கின்றனர். உதாரணமாக ஸர் புருஷோத்தம தாஸ் தாகூர் தாஸ் மட்டும் 51 ஸ்தாபனங்களில் டயரக்டராக இருக்கிறார். 850 பேர் 2,000 டயரக்டர் பதவிகளையும் (சராசரி நபர் ஒன்றுக்கு 2⅓ பதவி), 70 பேர் 1000 டயரக்டர் பதவிகளையும் (சராசரி நபர் ஒன்றுக்கு 14-2/7), 10 பேர் 300

## இந்தியாவில் கைத்தொழில் ஸ்தாபனங்கள்

### ஒரு சிலரின் ஏகபோக ஆதிக்கம்

(ஸ்ரீ அசோக மேத்தா)

[வளர்ந்துவரும் இந்தியக் கைத் தொழில் ஸ்தாபனங்களில் முதலாளிகளின் ஆதிக்கம் எவ்வாறு ஓங்கி நிற்கின்றதென்பதைப் புள்ளி விவரங்களுடன் விளக்கி ஸ்ரீ அசோக மேத்தா "மாடர்ன் ரிவ்யூ" பத்திரிகையில் வரைந்துள்ள கட்டுரையின் முக்கிய பாகத்தின் மொழி பெயர்ப்புக் கீழே வருகிறது:]

★

பதவிகளையும் (சராசரி நபர் ஒன்றுக்கு 30) வகித்து வருகின்றனர்.

மார்கன், ராக்பெல்லர் குடும்பங்களைப் பற்றி எல்லோரும் கேட்டிருப்பார்கள்—அமெரிக்க முதலாளி கோஷ்டியில் தலைமை வகிப்பவர்கள். 444 'ராக்ஷஸ' கைத்தொழில் ஸ்தாபனங்களை மார்கன் நிர்வகித்த போதிலும், உலகிலேயே பெரிய பாங்கர்களாக மார்கன் தொழில் நிலையங்கள் இருந்து வருகின்றன. ஆனால் ராக்பெல்லர்கள் கைத்தொழில் துறையில் முன்னணியில் நின்ற போதிலும், இப்போது தான் முதலாளித்வ கோஷ்டியில் சேர்ந்திருக்கிறார்கள்—அவர்கள், அமெரிக்காவிலேயே பெரிய பாங்கான சேஸ் நேஷனல் பாங்கின் நிர்வாகத்தை ஏற்றிருக்கிறார்கள். இன்று பணம் தான் அதிக சக்திவாய்ந்ததாக விளங்குகிறது—அதற்கு வியாபாரமும், கைத்தொழிலும் தலைவணங்க வேண்டியது தான்.

இந்தியாவிலும் வர்த்தக சக்தியைக் கைத்தொழில் சக்தியும், கைத்தொழில் சக்தியைப் பொருளாதார சக்தியும் முறையே வெற்றி கொண்டிருக்கின்றன. இருபது வருடங்கட்கு முன்னே, ஸெத் நரோத்தம மோரார்ஜி போன்ற பெரிய கைத்தொழில் நிபுணர்கள் நமது கைத்தொழில் பொருளாதாரத்தில் தலைமை வகித்து வந்தார்கள். இன்று, ஸ்ரீமதி வால்சந்த் ஹீராச்சந்த் போன்ற தைரியம் மிகுந்த ஒரு கைத்தொழில் நிபுணர் தமது பொருளாதார சக்திக்குறைவு பெருந்தடையாக விளங்குவதைக் காண்கிறார். பாங்குகளிலும், இன்ஷூரன்ஸ் கம்பெனிகளிலும், இன்வெஸ்ட் மெண்ட் டிரஸ்டுகளிலும் ஒருவர் ஆதிக்கம் செலுத்தினால் தான் முக்கியஸ்தராக முடியும். பணம் போடும் முதலாளிகள் தான் இன்று நமது பொருளாதார நிலையில் ஆதிக்கம் வகிக்கின்றனர்.

ஒவ்வொரு டிரஸ்டுக்கும் பாங்குகள் முதலிய பண உதவியளிக்கும் ஸ்தாபனங்களுடன் நெருங்கிய தொடர்பிருக்கிறது—பொதுவான டயரக்டர்கள் மூலம் இது சாத்தியப்படுத்தப் படுகிறது. டாட்டா ஸ்தாபனங்களிலுள்ள முக்கிய டயரக்டர்கள் ரிசர்வ் பாங்கு, இம்பீரியல் பாங்கு, ஸென்ட்ரல் பாங்கு, பாங்கு ஆப் இந்தியா, பாங்கு ஆப் பரோடா, யூனியன் பாங்கு ஆகியவற்றின் போர்டுகளில் அங்கம் வகிக்கிறார்கள். இதர டிரஸ்டுகளுக்கும் இம்மாதிரி பாங்குகளின் சம்பந்தம் இருந்து வருகிறது.

ரிசர்வ் பாங்கு போர்டில் ஸர் புருஷோத்தம தாஸ் இருக்கின்றார்; அவருக்கு ஆறு டிரஸ்களில் தொடர்பு உண்டு. இம்பீரியல் பாங்கு டயரக்டர் சபையில், டாட்டாஸ் கில்லிக் நிக்ஸன் பெர்ட் கம்பெனி, கில்லாந்தர்ஸ், ஆர்புத்நாட் கம்பெனி முதலிய ஸ்தாபனங்களின் பிரதிநிதிகள் இருக்கிறார்கள்.

பாங்குகள், இன்ஷூரன்ஸ் கம்பெனிகள், இன்வெஸ்ட்மெண்ட் டிரஸ்டுகள் இவற்றில் ஆதிக்கம் செலுத்தும் 12 பேர், பம்பாயில் கைத்தொழில் துறையில் உயர் நிலையில் இருக்கின்றனர். ஸர் புருஷோத்தம தாஸ், ஸர் சுனிலால், பிரேம் சந்த் சகோதரர்கள், ஜீஜிபாய் சகோதரர்கள், கவாஸ்ஜி ஜெகாங்கீர்கள் முதலியோர் தங்கள் பணசக்தி மூலம் கைத்தொழில் துறையில் பெரும் செல்வாக்குப் பெற்றிருக்கின்றனர்.

இன்ஷூரன்ஸ் கம்பெனிகள் சிறு மனிதர்களுடைய க்ஷேமநிதிகளை யெல்லாம் ஒன்று திரட்டி, இக்கம்பெனிகளுடைய ஆதிக்கத்திலிருக்கும் டிரஸ்டுகளுக்குக் கொண்டு சேர்க்கின்றன. பிர்லாக்களுக்கு ஒரு இன்ஷூரன்ஸ் ஸ்தாபனத் தொடர்பு இருக்கிறது. டால்மியாக்களுக்கு பாரதம், டாட்டாக்களுக்கு ஒரு இன்ஷூரன்ஸ் கம்பெனியும், ஒரு இன்வெஸ்ட்மெண்ட் டிரஸ்டு மிருக்கிறது.

டிரஸ்டுகளையும், கம்பெனிகளையும் தம் ஆளுகைக்கு உட்படுத்தியிருக்கும் முதலாளிகள் எத்தனை ஸ்தாபனங்களை நிர்வகிக்கின்றார்கள் என்பதைப் பொறுத்தல்லாமல், அவர்கள் நிர்வகிக்கும் ஸ்தாபனங்கள் நடத்தும் தொழிலைப் பொறுத்தே அவர்களது ஆதிக்கத்தின் அளவை மதிப்பிட வேண்டும். இரும்பு, நிலக்கரி, மைக்கா, விலிக்கா சுரங்கங்களை நிர்வகிக்கும் டாடா இரும்பு, எஃகு கம்பெனிக்கு 10½ கோடி ரூபாய் மூலதன மிருக்கிறது; ஆனால் அது நடத்தும் தொழிலின் அளவு சுமார் 34 கோடி. டாட்டாக்கள் நிர்வகிக்கும் வர்த்தக ஸ்தாபனங்களின் ஆஸ்தி மொத்தம் 100 கோடிக்கு மேலாகும். ஸர் புருஷோத்தம தாஸ், ஸர் சுனிலால், ஸர் கவாஸ்ஜி ஆகியோர் நிர்வகிக்கும் ஸ்தாபனங்களில் பல கோடிக்கணக்கில் தொழில் நடக்கிறது.

(10-ம் பக்கம் பார்க்க)

# தொழிற் பெயர்ப் பதிவுச் சட்டம்

## அதன் முழு விவரங்கள்

1940-ம் வருட ஸ்டிரெயிட்ஸ் செட்டில்மெண்டு தொழிற் பெயர் மசோதாவின்படி அங்கு தொழில் நடத்துவோர் ரிஜிஸ்தர் செய்து கொள்ள வேண்டும். தொழில் நடத்துவோரின் சௌகர்யத்தை உத்தேசித்து தொழிற் பெயர்ப் பதிவுச் சட்டத்தின் மொழி பெயர்ப்பு கீழே கொடுக்கப்படுகிறது:

★

### முகவுரை

தொழிற் பெயர்ப் பதிவுச் சட்டமானது காலனியில் 1940ௗ ஆகஸ்டு-மீ 29-உ யன்று அமுலுக்கு வந்தது.

பதிவாக வேண்டிய பர்ம் (firm)களும் நபர்களும்:—இச்சட்டத்தின்படி பதிவு செய்ய வேண்டியவர்கள் யார் யாரென 4வது செக்ஷனில் கீழ்க்கண்டவாறு நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. (அ) காலனியில் ஒரு தொழில் ஸ்தலத்தை வைத்துக் கொண்டு தனிப்பட்ட நபர்களாயிருக்கும் எல்லா பங்குதாரர்களுடையவும் உண்மையான முழுப் பெயர்களையும், அல்லது கம்பெனிகளாயிருக்கும் எல்லா பங்குதாரர்களுடையவும் ஒரு சேர்க்கையு மில்லாத கூட்டுப் பெயர்களையும், கொண்டிராத ஒரு தொழிற் பெயரின் கீழ் தொழில் நடத்தி வரும் ஒவ்வொரு பர்மையும் (ஆ) காலனியில் ஒரு தொழில் ஸ்தலத்தை வைத்துக் கொண்டு ஒரு சேர்க்கையுமின்றி தனது உண்மையான முழுப் பெயர்களையும் அல்லது ஒரு சினர் விஷயத்தில் பொதுவாக அழைக்கப்படும் எந்த சொந்தப் பெயரையும் கொண்டிராத ஒரு தொழிற் பெயரின் கீழ் தொழில் நடத்தும் ஒவ்வொரு தனிப்பட்ட நபரும், (இ) காலனியில் ஒரு தொழில் ஸ்தலத்தை வைத்துக் கொண்டு ஒரு தனிப்பட்ட நபரோ அல்லது பர்மோ தனது அல்லது பர்மின் ஒரு பங்குதாரருடைய பெயரை, இந்த மசோதா அமுலுக்கு வரும் முன்னாவது அமுலுக்கு வந்த பிறகாவது மாற்றிக்கொள்ளும் பட்சத்தில் (கலியாணத்தினால் பெயர் மாற்ற மேற்படக்கூடிய ஒரு பெண்ணைத் தவிர) அந்த தனிப்பட்ட நபரும், பர்மும்,

"தொழிற் பெயர்" என்பது கூட்டுத் தொழில் அல்லது இதர தொழில்களுக்கு வைத்து நடத்தப்படும் பெயரையும் விலாசத்தையும் குறிக்கும்.

"முழுப்பெயர்" என்பது ஒரு நபரின் எந்த முழுப்பெயரை எல்லோருக்கும் பொதுப்படையாகத் தெரியுமோ அந்தப் பெயரைக் குறிக்கும். ஒரு இந்தியரைப் பொறுத்தவரையில் அவருடைய பெயரும் அவருடைய குடும்பப் பெயரும் (ஏதாவது இருக்தால்) அவருடைய தகப்பனர் பெயரும், அல்லது அன்னுருடைய குடும்பப் பெயரும் முழுவதுமோ அல்லது குறிப்பெழுத்துக்களாலோ தலைப்பெயர்களும் இந்த வார்த்தைக் குள்ளடங்கும்.

ஒரு ஹிந்து அவிபக்த குடும்பத்திற்கோ அல்லது பாகஸ்தர்களுக்கோ (co-parcenaries) சொந்தமாயிருக்கும் ஒரு தொழிலோ அல்லது தொழிலில் ஒரு பங்கோ அக்குடும்பத்தின் கர்த்தா அல்லது மானேஜருக்குச் சொந்தமெனவே கருதப்படும்.

விதி விலக்குகள்:—கீழ்க்கண்ட தொழில்கள் இச்சட்டத்தின் 3வது செக்ஷன்படி ரிஜிஸ்தர் செய்யவேண்டிய தேவையில்லை.

இச்சட்ட விதிகள் கீழ்க்கண்டவற்றை பாதிக்கமாட்டா:—(அ) வருடத்திற்கு $360க்குக் குறைந்த முனிசிபல் மதிப்பு வாடகையுள்ள கட்டடங்களிலும், ஒரு கட்டடத்திற்குப் பகுதி பகுதியாக வரி நிர்ணயிக்கப்பட்டிருந்தால் மொத்த மதிப்பு வாடகை $360க்குக் குறைவாயுள்ள கட்டடங்களிலும் நடத்தப்படும் தொழில்களும், (ஆ) சொஸைட்டி சட்டம் அல்லது கூட்டுறவுச் சங்க சட்டம் முதலியவைகளின்படி பதிவு செய்யப்பட்ட எவ்வித சொஸைட்டிகளும் (இ) எழுத்து மூலமாயுள்ள சட்டங்களின்படி ஏதோ குறிப்பிடப்பட்டிருக்கும் சில யோக்கியதாம்சங்களைப் பெற்று அச்சட்டங்களிற் கண்டபடி தங்களது பெயர்களைப் பதிவு செய்து கொண்டிருப்பவர்களால் நடத்தப்படும் தொழிலும்.

ஒரு தொழில் பதிவு செய்ய வேண்டியது அவசியமா அவசியமில்லையா என்ற சந்தேகம் ஏற்படும் போது சட்டத்திற்கு விரோதமாக நடந்து குற்றத்திற்கு உள்ளாவதைவிடப் பதிவுசெய்வதே மேலான வழியாகும்.

பதிவு செய்ய வேண்டிய காலம்:—இச்சட்டத்தின் கீழ்ப் பதிவு செய்ய வேண்டிய விவரங்கள் ஒரு தொழில் ஆரம்பித்து 14 நாட்களுக்குள் சமர்ப்பிக்க வேண்டும். ஆனால், இச்சட்டம் அமுலுக்கு வருமுன் ஒரு தொழில் நடந்து வந்தாலோ அல்லது சட்டம் அமுலுக்கு வந்து இரண்டு மாதத்திற்குள் வந்தாலோ, அமுலுக்கு வந்த தேதியிலிருந்து 6 மாதத்திற்குள்ளாகப் பதிவுசெய்தால் போதுமானது.

பாரங்களில் கையொப்ப மிடல்:—சமயத்திற் கேற்றவாறு குறிப்பிட்டிருக்கும் பாரங்களில் பின் கண்டவர்கள் கையெழுத்திட வேண்டும்.

(அ) தனிப்பட்டவரின் தொழிலானால், தனிப்பட்டவர்; (ஆ) கம்பெனியானால், அதனுடைய டைரக்டர் அல்லது காரியதரிசி; (1) பங்குதாரர்களாயிருக்கும் தனிப்பட்டவர்களும் பங்குதாரராயிருக்கும் ஒவ்வொரு கம்பெனியின் டைரக்டர் அல்லது கார்யதரிசியும், (2) பங்குதாரராயிருக்கும் ஏதாவதோர் தனிப்பட்ட நபர்; அல்லது (3) பங்குதாரராயிருக்கும் ஓர் கம்பெனியின் டைரக்டர் அல்லது காரியதரிசி, கடைசியில் கூறப்பட்ட ஒரு சந்தர்ப்பங்களில் கையொப்ப மிடுபவர்கள் ஒரு வாக்கு மூலம் தாக்கல் செய்ய வேண்டும்.

இருபதாவது விதிப்படி உள்நாட்டு மானேஜருக்குச் சகல பொறுப்பும் அளிக்கப்பட்டிருக்கும் பக்ஷத்தில் அந்த மானேஜர் பதிவுக்குத் தேவைப்படும் விவரங்களைக் கொடுக்க ஜவாப்தாரியாவார். அப்பொழுது ஒரு வாக்கு மூலமும் கொடுக்க வேண்டும்.

மாற்றங்கள் பதிவு:—பதிவு செய்யப்பட்ட விஷயங்களில் ஏதாவது மாற்றம் செய்தாலோ, அல்லது ஏற்பட்டாலோ, அவ்வித மாற்றம் ஏற்பட்ட 14 நாட்களுக்குள்ளாக அதற்கேற்பட்ட பாரத்தில் மாற்றத்தின் தேதியையும், தன்மையையும் பூர்த்தி செய்து சமர்ப்பிக்க வேண்டும்.

தொழில் நிறுத்தம்:—இச்சட்டத்தின் கீழ்ப்பதிவு செய்யப்பட்ட தொழில் ஒன்று நிறுத்தப்பட்டால், நிறுத்தப்பட்டு 3 மாதத்திற்குள் ரிஜிஸ்திராருக்குத் தெரியப்படுத்த வேண்டும்.

### கட்டணங்கள்

B. N. 1 பாரத்தில் விவரங்களைப் பதிவு செய்ய $10-00, (சர்டிபிகேட் உள்பட) B N2பாரத்தில் கூடுதலான விவரங்களைப் பதிவு செய்ய $ 5-00, (சர்டிபிகேட் உள்பட) ரிஜிஸ்தர் செய்த விவரங்களில் ஏற்பட்ட மாற்றத்தைப் பதிவு செய்ய $ 1-00.

குறிப்பு:—(1) இத்துடன் இணைத்திருக்கும் சட்டத்தின் மொழி பெயர்ப்பானது வார்த்தைக்கு வார்த்தை மொழி பெயர்க்கப் படாமல், சாராம்சம் விளங்க வேண்டுமென்ற நோக்கத்துடன் மட்டுமே தயார் செய்யப்பட்டிருக்கிறது.

"Firm" என்பதைக் குறிக்க தமிழில் 'பர்ம்' என்ற வார்த்தையும் 'Corporation' என்பதைக் குறிக்க 'கம்பெனி' என்ற பதமும் மொழி பெயர்ப்பில் உபயோகப்படுத்தப் பட்டிருக்கின்றன.

(2) இச்சட்ட சம்மந்தமாய் பூர்த்தி செய்ய வேண்டிய பாரங்களும் இன்னும்

[9-ம் பக்கம் பார்க்க]









# சிசு மணத் தடைச் சட்டம்

## கோச்சி சட்டசபையில் நிறைவேறியது

கொச்சி சட்ட சபையில் திருமதி தங்கம்மா, என். மேனேன் கொண்டு வந்த சிசு மணத் தடைச் சட்டம் ஆதரவாக 28 ஓட்டுகளும் எதிராக 7 வாக்குகளும் பெற்று பேராதரவுடன் நிறைவேறியது. இச்சட்டப்படி 18 வயதுக்குக் கீழ்ப்பட்ட ஆண்களுக்கும் 14 வயதுக்குக் கீழ்ப்பட்ட பெண்களுக்கும் கல்யாணம் செய்வது தடுக்கப்படுகிறது. திருமதி மேனேன் ஆதரவற்று தத்தளிக்கும் ஆயிரக்கணக்கான சகோதரிகளை சிசு மணக்கொடுமையிலிருந்தும், சிசு விதவைக் கொடுமையிலிருந்தும் காப்பாற்றவேதான் இந்த மசோதாவைக் கொண்டுவந்ததாகத் தெரிவித்தார்.

## சென்னை சர்க்கார் அச்சுக்கூடம்

சென்னை சர்க்கார் அச்சுக்கூடத்தினுடையவும், அதோடு சேர்ந்த கிளைகளினுடையவும் 1939—40 ம் வருஷத்திய நிர்வாக அறிக்கை வெளியாகி யிருக்கிறது. அதிலடங்கியுள்ள விவரங்களிற் சில வருமாறு:

1940 மார்ச் 30௨ மொத்தம் 1986 ஊழியர்கள் இருந்தனர். இவர்களில் 296 பேர் தண்டனையடைந்த கைதிகள். மொத்தம் கம்பாஸிட்டர்கள் 474. மொத்தம் வருமானம் ரூ 4,04,675—5—9. செலவு ரூபா 11,31,227—8—7. அச்சுவேலை பைண்டு வேலை, காகித விலை பிளாக் தயாரிப்பு, பைண்டிங் சாமான்கள் உள்பட மொத்தம் ரூபா 17,38,522-1-0க்கு இவ்வருடம் வேலை நடைபெற்றிருக்கிறது.

## உடனே டொமினியன் அந்தஸ்து வழங்கவும்

உடனே டொமினியன் அந்தஸ்தை வழங்குவதன் மூலம் தான் இந்தியர்களின் மனப்பூர்வமான ஒத்துழைப்பைப் பெற முடியும் என்று அகில இந்திய இந்து மகா சபையின் காரியக் கமிட்டிக் கூட்டம் தனது அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறது.

# இந்தியப் பாதுகாப்புச் சட்டப்படி

## சிறையிலிருப்பவர்களின் தொகை

இந்தியப் பாதுகாப்புச் சட்டப்படி இதுவரை எவ்வளவு பேர் சிறையில் வைக்கப் பட்டிருக்கின்றனர் என்று, ஸர்தார் சாந்த சிங் இந்தியா சட்ட சபையில் 21-ந் தேதி கேட்டபோது, ஜனாப் ஜபருல்லாகான் அளித்த விவரம் வருமாறு: (அக்டோபர் முதல் தேதி வரை தண்டிக்கப்பட்டவர்களின் விவரம் தான் இப்பொழுது மத்திய சர்க்காரிடம் இருக்கிறது.)

சென்னை 114 பேர்; பம்பாய் 60; வங்காளம் 205; ஐக்கிய மாகாணம் 211; பஞ்சாப் 92, பீஹார் 115; மத்திய மாகாணம்—பீரார் 29; அஸ்ஸாம் 5; எல்லைப்புற மாகாணம் 5; ஸிந்து 9; ஒரிஸா 2.

விசாரணையின்றிக் காவலில் வைக்கப் பட்டுள்ளவர்கள்:—சென்னை 20, பம்பாய் 38, வங்காளம் 20, ஐ. மாகாணம் 68, பஞ்சாப் 81, பீஹார் 22 எல்லைப்புறம் 7; மத்திய ஸர்க்கார் அதிகாரத்துக் குட்பட்ட பிரதேசத்தில் 25.

## சென்னை பிலிம் தணிக்கை போர்டு

நவம்பர் 21௨ முதல் சென்னை பிலிம் தணிக்கை போர்டில் கீழ்க்கண்டவர்கள் இருப்பார்கள் என்று சென்னை சர்க்கார் அறிவிக்கின்றனர்.

சென்னை போலீஸ் கமிஷனர், சென்னை கோட்டை ஸ்டேஷன் ஆபீசர், எம். சி. ராஜா, ஸ்ரீமதி குரியன், ஸ்ரீமதி டி. எல். ஆர். சந்திரன், எம். டி. ராஜன், ஜி. இ. வாக்கர், பி. போக்சர், பி. சம்மந்த முதலியார், அப்துல் ஹமீத்கான், டாக்டர் யு. கிருஷ்ண ராவ், பாரிஸ்டர் சி. சாம்பசிவராவ், ஜமால் முகம்மத் இப்ராஹிம், எஸ். கே. தெய்வசிகாமணி முதலியார், எஸ். வி. வி. வி. வெங்கடேச சாஸ்த்ருலு, டி. ஏ. வி. நாதன். பதவிகாலம் ஒரு வருஷம்.

தூத்துக்குடி நகர சபையின்புதிய கட்டடத்தை சென்னை கவர்னர் திறந்துவைக்கும்பொழுது அந்த விழாவில் கலந்துகொள்ளக்கூடாதென்று தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி சேர்மென் ஸ்ரீ ரோச் விக்டோரியாவுக்கு கண்டிப்பாக உத்தரவிட்டிருந்தது. கமிட்டி உத்தரவை மீறி அவர் வைபவத்தில் கலந்துகொண்டார்.

# சிந்துவில் ஆஸாத் வெற்றி

## மந்திரிசபையில் மாற்றம்

காங்கிரஸ் தலைவர் மௌலானா அபுல் கலாம் ஆஸாத் சிந்து மாகாணத்தில் ஏற்பட்டுள்ள அராஜக நிலை ஒழிய தக்க ஏற்பாடு செய்வதற்காக கராச்சிக்கு வந்து இத்தனை நாளாகப் பலரையுங் கண்டுபேசி சட்டசபையிலுள்ள பற்பல கட்சியினரின் ஆதரவையுங் கொண்ட நிலையான மந்திரிசபை ஒன்றை நியமித்து விட்டார்.

## கான்பகதூர் அல்லாபக்ஷ் மீண்டும் மந்திரியானார்

சிந்து மந்திரிகளில் ஒருவரான மிஸ்டர் ஜி. எம். ஸையத் ராஜினாமா செய்துவிட்டார். மாஜி பிரதம மந்திரியும் தற்போது சட்டசபையின் எதிர்க் கட்சித் தலைவராகவுமுள்ள கான்பகதூர் அல்லா பக்ஷ் மிஸ்டர் ஸையத்துக்குப் பதிலாக மந்திரிப் பதவி யேற்றார். பிரதம மந்திரி மீர் பந்தலிகான் பிப்ரவரி மாதம் ராஜினாமா செய்வார். ஸர் குலாம் ஹுஸேன் பிரதம மந்திரியாக நியமிக்கப்படுவார்.

## மோசடி வழக்கு எதிரி மறைந்து விட்டார்

ஸைதாப்பேட்டை சப் டிரஷரி வழக்கில் எதிரியான நாகசாமி பூவிருந்தவல்லி சப் ஜெயிலில் இருந்தார். அக்டோபர் 29௨ சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு ஆபரேஷனுக்காக அனுப்பப்பட்டார். ஆஸ்பத்திரியிலிருக்கும் பொழுது அவருக்கு போலீஸ் காவல் இருந்தது. நாகசாமிக்குபெயில் கொடுக்கப்பட்டிருக்கிறதென்றும், அவரைப் போலீஸ் காவலிலிருந்து நீக்கிவிட வேண்டுமென்றும், ஒரு பொய் உத்தரவு கடித மூலமாய் சென்னைப் போலீஸ் கமிஷனருக்குக் கிடைத்ததென்றும், பூவிருந்தவல்லி சப் மாஜிஸ்திரேட்டிடமிருந்து அனுப்பப்பட்டதாக அதில் எழுதப்பட்டிருந்ததென்றும், இக்கடிதம் நிஜமானதென்று நினைத்துக் கொண்டு இந்தக் கடிதத்தில் கூறிய ஆஸ்பத்திரியிலிருந்து போலீஸ் காவல் எடுக்கப்பட்டதாகவும் கூறப்படுகிறது. பிறகு நவம்பர் 15-ந்தேதி ஆஸ்பத்திரியிலிருந்து நாகசாமி டிஸ்சார்ஜ் செய்யப்பட்டார். இதற்குப் பிறகு அவர் மறைந்துவிட்டார். அதிகாரிகள் தேடிவருகின்றனர்.

# காங்கிரஸ் தலைவர்களை விடுவிக்க

## லண்டனில் கிளர்ச்சி

லண்டனில் இந்தியா லீக் கூட்டத்தில் சிறைப்பட்ட காங்கிரஸ்காரர்களை விடுதலை செய்யவேண்டு மென்று கோரும் தீர்மானம் நிறைவேறியது. பார்லிமெண்டு அங்கத்தினர்கள் உள்பட பலர் தீர்மானத்தை ஆதரித்தனர்.

## பிரிட்டனுக்குப் பண உதவி வேண்டும்

பிரிட்டனுக்கு இவ்வருஷம் மிகக் கஷ்டமான வருஷமாயிருக்கப் போகிறதென்றும், சகலவித யுத்த சப்ளைகளும் அதற்கு வேண்டியிருக்கிறதென்றும், பண உதவி கூட வேண்டியிருக்கு மென்றும் லார்டு லோதியன் யுனைடெட் ஸ்டேட்ஸ் பத்திரிகைக்காரர்களிடம் தெரிவித்தார். பிரிட்டனின் இறுதி வெற்றியில் பிரிட்டிஷ் மக்களுக்குத் திடமான நம்பிக்கை இருக்கிறதென்றும், குண்டு வீச்சுகள் தேசிய ஒற்றுமையை அதிகப்படுத்தி யிருக்கின்றனவென்றும் அவர் கூறினார்.

## வறுமையின் கொடுமை

நவம்பர் 17௨ மன்று பிற்பகல் 3-15 மணிக்கு மதுரையிலிருந்து விருதுநகருக்கு வந்துகொண்டிருந்த பாசஞ்சர் டிரெயின் கள்ளிக்குடிக்கும் கொக்குளஞ்சேரிக்கு மிடையே வந்து கொண்டிருக்கும் பொழுது, இருபது வயதுள்ள வாலிபன் ஒருவன் குறுக்கே விழுந்து தற்கொலை செய்து கொண்டான். அவனிடமிருந்த கடிதத்திலிருந்து வறுமையின் கொடுமை தாங்க மாட்டாது பிரஸ்தாப கோர முடிவை மேற்கொண்டதாகத் தெரிகிறது.

## ராட்சசக் காலடி

ஜல்பைகூரில் ஒரு ராட்சசக் காலடி காணப்பட்ட தென்ற செய்தி முன்னரே வெளி வந்திருக்கிறது. இப்பொழுது அதற்கடுத்தாற் போலுள்ள மலையில் 12 அடிச்சுவடுகள் காணப்பட்டனவாம். இவைகளை அளந்து பார்த்ததில் குதிகாலிலிருந்து கட்டைவிரல் வரையில் 12 அங்குலமும், குதிகாலிலிருந்து சுண்டு விரல் வரையில் 9 அங்குலமும், குதிகாலின் அகலம் 3½ அங்குலமும், முன்பாகம் 4½ அங்குலமும் இருந்ததாம்.

## எம். ஏ. பட்ட பறிமுதல்

சென்னை கவர்ன்மெண்டும் ஐக்கிய மாகாண கவர்ன்மெண்டும் ராஜீய நடவடிக்கைகளில் கலந்து கொள்ளும் மாணவர்களை எச்சரிக்கை செய்து சுற்றறிக்கை விடுத்ததைக் கண்டிக்க, நவம்பர், 16௨ டில்லியில் மாணவர் வேலை நிறுத்தத்திற்கு ஏற்பாடு செய்த டில்லி மாணவர் சம்மேளனத் தலைவர் மிஸ்டர் பரூக்கின் எம். ஏ. பட்டத்தையும், காரியதரிசி மிஸ்டர் டி. சாங்கியின் பி. ஏ. பட்டத்தையும் டில்லி சர்வகலாசாலை வைஸ் சான்ஸலர் பறிமுதல் செய்து விட்டார்.

## ஜுர நோய்களைக் குறித்து சில உண்மைகள்

### உடம்பு தேற உணவு முக்கியம்

ஜுரத்தின் சாதாரண அறிகுறிகளான தேக உஷ்ணாதிக்கம், குளிர் நடுக்கம், பயங்கரமான தலை வலி இவையெல்லாம் இரத்தத்திற் கலந்தோடும் ஜுர விஷங்கள் உங்கள் நரம்புகளையும் தசைநார்களையும் தாக்குவதன் வெளிப்படை லக்ஷணங்களாமென ஆராய்ச்சிக்காரர்கள் கூறுகின்றனர். நீங்கள் சோர்வுற்று பலஹீனமுமடைகிறீர்கள்.

பூர்ண குணமுடைய உடைந்த நரம்புகளுக்கு புத்துயிரளித்தல் அவசியம். குடலின் பலஹீனமான நிலையில் கெட்டியான உணவு ஜீரணமாகா. ஹார்லிக்ஸே அதற்குத் தகுந்த லகு ஆகாரம். சுலபத்தில் ஜீரணமாகக்கூடியது. உலர்ந்து போன சரீரத்திற்கு மீண்டும் ஆரோக்கியமும் சதைப்பற்றும் விரைவிலூட்டி தேற்றுகிறது. முக்கிய வைத்தியசாலைகள் பலவும் ஹார்லிக்ஸை ஜுர நோய்க்கு பத்திய உணவாக இப்போது ஆதரித்து வருகின்றார்கள்.

# விளம்பரம்

இராமநாதபுரம் ஜில்லா காரைக்குடியிலிருக்கும் அ. லெ. சொ. சொக்கலிங்கம் செட்டியார் சம்சாரமாகிய வள்ளியம்மை ஆச்சி இதன் மூலம் தெரிவிப்பதென்னவென்றால்:—

காரைக்குடி வடக்கு வல்லம்பர் தெரு 12-வது வார்டு T. S. 169-ம் நிம்பர் வீடும் அதைச் சேர்ந்த மனைக்கட்டும் எனக்கே வார்சு பாத்தியம். காரைக்குடியிலிருக்கும் கும. பெரி. சு. பழ. பழனியப்ப செட்டியாரின் சுவீகார மகனாகிய சுப்பிரமணியன் செட்டியாருக்கு தன் சொந்த முறையிலாவது வார்சு முறையிலாவது மேற்படி வீட்டிலும் அதைச் சேர்ந்த மனை இடத்திலும் எவ்விதமான பாத்தியம் கிடையாதென்றும் அவர் மூலமாகவோ அல்லது அவருக்காக வேறு யார் மூலமாவது யாரேனும் கிரயம், அடமானம் ஒத்தி வகையறா பெற்றிருந்தாலும் இனி பெற்றாலும் அது செல்லக்கூடியதில்லை யென்பதையும் என்னைக் கட்டுப்படுத்தாதென்றும் இதன் மூலம் எல்லோருக்கும் அறிவித்திருக்கிறது.

அ. லெ. சொ. சொக்கலிங்கம்
செட்டியார் சம்சாரம் வள்ளியம்மை ஆச்சி.

காரைக்குடி, 26—11—40.

குமரன்

காரைக்குடி

விக்கிரம-ஞு கார்த்திகை-மீ 13உ

## பலே கொச்சி!

சமீபத்தில் கூடிய கொச்சி சமஸ்தான சட்டசபையில் பால்ய மணத்தடை மசோதா நிறைவேறி விட்ட செய்தி மகிழ்ச்சி யளிப்பதாகும். இந்த பால்ய மணத்தடைச் சட்டம் பிரிட்டிஷ் இந்தியாவில் செய்யப்பட வேண்டுமென்ற முயற்சி நீண்ட காலமாக இருந்து வந்தது. வைதீகர் பலமாக எதிர்த்தனர். பொய் புரட்டு முதலிய கை வரிசைகளையும் காட்டினர். மசோதா சட்டமான பிறகு அரசாங்கத்தாரையும் மிரட்டிப் பார்த்தனர்; வைசிராய் இதற்கு அனுமதி மறுப்பு செய்ய வேண்டு மென்று பிரார்த்தித்தனர். மன்னருக்கும் விண்ணப்பம் போட்டனர். எல்லா முயற்சியும் மண்ணுகி விட்டன. பிறகு சிலர் சட்டமறுப்பு செய்வதாக ஆர்ப்பாட்டம் செய்தனர்; சில பால்ய விவாகங்களைக் கூட நடத்தியதாகச் செய்திகள் வெளியாயின.

இவ்வளவு தடபுடலுடன் செய்யப்பட்ட சட்டம் உருப்படியாக வில்லை. காரணம் சட்டத்திலிருந்த பலவித மான குறைபாடுகளும், வழ வழப்புமே யாகும். சீர்திருத்தப்பட்டதன் பயனை அந்தச் சட்டம் நன்கு அமுலுக்கு வந்திருக்கிறது. குழந்தைக்குக் கல்யாணம் செய்ய வேண்டு மென்ற எண்ணமே தலை தூக்க வில்லை. கல்யாணம் செய்வதற்கு வயது 18-ம் 14-ம் தானென்ற மனப்பான்மை தாமாக உதயமாகி விட்டது. அதற்குச் சரியாக மற்ற காரியங்களை நடத்திக் கொள்கின்றனர். வைதீகர் சொன்னபடி ஹிந்துமதம் அழிந்துபோகவு மில்லை; சாஸ்திரம் மாண்டு போகவு மில்லை; எல்லாம் இருந்தபடியே தானிருக்கின்றன. இந்த வெறும் கூச்சல் ஆசாமிகள் வாயடங்கிக் கையடங்கிக் கிடக்கின்றன ரென்னலாம். பாமர ஜனங்களை மிரட்டுகிற தைத்தவிர வைதீகர்களிடம் உள்ளீடில்லை யென்பதை இதில் மட்டுமன்று; இப்படிப்பட்ட எல்லாக் காரியங்களிலும் பார்த்து வருகிறோம்.

சமூக சீர்திருத்தச் சட்டங்களுள் தலையானது பால்ய மணத்தடுப்புச் சட்டமாகு மென்று கூறலாம். கல்யாணத்துக்குத் தகுந்த வயது வந்தபின்னரே கல்யாணம் செய்தல் முறை. உடற்கூறு வல்லுநர் இன்னும் மேற்பட்ட வயதிலேயே கல்யாணம் செய்தல் வேண்டு மென்கின்றனர். பால்ய விவாகம் செய்யத் தலைப்பட்டுத்தான் நமது மக்கள் கூனிக் குறுகிப் பரிதாப நிலையில் உடலைத் தூக்கிக் கொண்டு திரிகின்றன ரென்பது கவனிக்கத்தக்கது. நமது எதிர்கால சந்ததியாருக்கு ஒரு சிறந்த வரமாக இந்தச் சட்டம் விளங்குகிறதென்னல் மிகை யன்று.

இதனை யொட்டி பல சமஸ்தானங்கள் பால்ய மணத்தடைச் சட்டத்தை இயற்றியிருக்கின்றன. அப்படியே தான் கொச்சி சட்டசபையிலும் ஒரு மசோதா கொண்டுவரப்பட்டது. இம் மசோதாவை மேற்படி சட்டசபை அங்கத்தினரான ஸ்ரீமதி தங்கம்மா, என். மேனன் கொண்டுவந்து அதன் அவசியத்தை எடுத்துக் கூறியிருக்கிறர். மசோதா ஏராளமான வோட்டுக்களால் நிறைவேறி விட்டது. அதனை ஆதரித்தவர் 28. எதிர்த்தவர் 7. கொச்சி சட்டசபையில் சப்தரிஷிகள் இருப்பதைப்பற்றி எவரும் ஆச்சரிப்பட மாட்டாரென்று கருதுகிறோம்.

கோயில் நுழைவு திருவாங்கூரில் அனுமதித்த நாளில், கொச்சி எப்படியிருந்த தென்பதை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். திருவாங்கூர் சமஸ்தான எல்லையிலுள்ள ஒரு கோயில் பூசாரி கொச்சிக் கோவிலுக்குள் நுழைந்ததற்காக வேலை பறிமுதலாகி விட்டது. இதை மனத்தில் வைத்துக் கொண்டு, வர்ணாசிரம சுயராஜ்ய சங்கத்தலைவர் நடேசய்யரவர்கள் கொச்சி மகாராஜாவுக்கு ஒரு விண்ணப்பம் விடுத்தார்கள். இந்த விண்ணப்பத்தை கொச்சி ராஜா ஏற்றுக் கொண்டால் அதன் பயனென்னவாகும்? பிரிட்டிஷ் இந்தியா முழுமையும் சாஸ்திர விரோதம் செய்து நரகம் புகும்போது கொச்சிமட்டும் காப்பாற்றப் படட்டும் என்று ஐயரவாள் கருதியிருக்கலாம். யார் என்ன கருதி யென்ன பயன்? கொச்சி சட்டசபை மெம்பர்களில் இருபத்தெட்டுப் பேர் நைதுக்கி விட்டார்கள். மற்ற எழுவர் கருத்தின் உண்மையை யாரறிவார். மசோதா தான் சட்டமாகப் போகிறதே வைதிகர் கண்ணைத்துடைத்து வைக்கலா மென்று கருதித் தூக்கினும் தூக்கியிருக்கலா மல்லவா? மதுரை வர்ணாசிரம சுயராஜ்ய சங்கம் இந்த விஷயத்தில் ஒண்ட இடமில்லாமல் தென்மேற்குக் கடலருகிலுள்ள கொச்சியைத் துணைதேடிச் சென்றது. அங்கும் இடங்கிடைக்க வில்லை. பாவம்!

கொச்சி சட்டசபை அங்கத்தினர்கள் இவ்வளவு காலத்திற்குப் பிறகாவது பிஞ்சில் மக்கள் பழுத்து உதிராதபடி இந்தப் பாதுகாப்பைச் செய்ய முற்பட்டதற்கு வாழ்த்துக் கூறுகிறோம். அடுத்துக் கோயில் நுழைவுத் தீர்மானத்தையும் செய்ய முற்படல் வேண்டு மென்று விரும்புகிறோம்.

## உள்ளூர்ச் செய்திகள்

### மழை

இவ்வாரம் சிறிது விட்டு விட்டு நல்ல மழை பெய்தது.

### நகரசபைக் கூட்டம்

நகர சபையின் சாதாரணக் கூட்டமொன்று நவம்பர் 30உ சனிக்கிழமை மாலை 5 மணிக்கு "காந்தி மாளிகை"யில் நடைபெறும். காரைக்குடி முனிசிபல் எல்லைக்குள்ளிருக்கும் விவசாயிகள் ஒவ்வொருவருக்கும் விவசாய உபயோகத்திற்காக மட்டும் ஒரு ஜோடி மாடும் ஒரு வண்டியும் வைத்துக்கொள்ள இலவச லைசென்ஸ் கொடுக்கலாமென்று ஒரு தீர்மானம் கொண்டுவரப்பட்டிருக்கிறது.

### சுகாதாரப் பிரசாரம்

சொக்கலிங்கம் சுகாதார நிலையத்தில் 26—11—40 மாலை 5-மணிக்கு ஸ்ரீ ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் தலைமையில் சாண்டோ ஸ்ரீ லெ. சோமசுந்தரம் செட்டியார் உடற்பயிற்சியைப் பற்றி உபன்யாசம் செய்தார். டாக்டர். பீம்சிங், கமிஷனர் ஸ்ரீ ஏ. கோபாலகிருஷ்ணய்யர் முதலியவர்கள் சுகாதாரத்தைப் பற்றிப் பேசினர். நகரசபையார் உடற்பயிற்சி உபாத்தியாயர் ஒருவரை நியமித்திருக்கின்றன ரென்றும் பொது ஜனங்கள் பயிற்சி பெறலாமென்றும் கூறினர். தலைவர் முடிவுரையுடன் இரவு 7-மணிக்குக் கூட்டம் முடிவுற்றது.

### இந்தோ சீனுவில் ஏகபோக உரிமை
#### ஜப்பான் கேட்கிறது

ஜப்பான் பிரஞ்சு இந்தோ சீனுவுக்கு கீழ்க்கண்ட கோரிக்கைகளை விடுத்திருக்கிறதாக சீனப் பத்திரிகையில் ஒரு செய்தி காணப்படுகிறது.

(1) டிசம்பர் 5உ முதல் இந்தோ சீனுவில் உற்பத்தியாகும் ரப்பர் முழுதையும் வாங்கிக்கொள்ள ஜப்பானுக்கு உரிமை இருக்கவேண்டும். (2) இந்தோ சீனுவில் இயற்கை வசதிகளை அபிவிருத்தி செய்வதில் ஜப்பானியரைத் தவிர வேறுயருக்கும் எத்தகைய பாத்தியதையும் இருக்கக் கூடாது.

## நிர்வாக சபை விஸ்தரிப்பு விஷயம்

### வைஸ்ராய் பேச்சு

நவம்பர் 20உ இந்திய சட்டசபை, ராஜாங்க சபை இவற்றின் கூட்டத்தில் வைசிராய் பேசுகையில் குறிப்பிட்டதாவது:

"எனது நிர்வாக சபையை விஸ்தரிக்கும் யோசனைக்கு இந்திய ராஜீயத் தலைவர்களிடமிருந்து எதிர்பார்த்த அளவுக்கு ஆதரவு கிடைக்கவில்லை. நிர்வாகசபை விஸ்தரிப்புப் பிரேரபணை இந்தியருக்கு உண்மையான அதிகாரத்தையும், உண்மைப் பொறுப்பையும் அளிக்கும். இந்தப் பிரேரபணையை பிரிட்டிஷ் சர்க்கார் வாபீஸ் பெற உத்தேசிக்கவில்லை. பிரதிநிதித்துவம் வாய்ந்தவர்களது ஆதரவு கிடைக்குமெனத் தெரிந்ததும் அமுலுக்குக் கொண்டுவர சர்க்கார் தயாராயிருக்கிறார்கள். தற்போது விஸ்தரிப்பு யோசனை நிறுத்திவைக்கப்பட்டிருக்கிறது."

### பண்டித நேரு தண்டனை விஷயம்

இந்திய சட்டசபையின் 29உ கூட்டத்தில், பண்டித நேருவுக்கு என்ன தண்டனை விதிப்பதென்னும் விஷயமாக இந்திய சர்க்காரோ அல்லது இராஜப் பிரதிநிதியோ கலந்து ஆலோசிக்கப்பட்டனரா என்று ஸ்ரீ ஏ. வி. தக்கர் கேட்ட கேள்விக்கு "இல்லை" என்று ஸர் மாக்ஸ்வெல் பதிலுரைத்தார்.

### ஸ்திரீகள் சொத்துரிமைச் சட்டம்

இந்திய சட்டசபையில், ஸ்திரீகள் சொத்துரிமைச் சட்டத்தைத் திருத்துவது சம்பந்தமான மசோதாவை தனிக் கமிட்டிக்கு விடவேண்டுமென்று ஸ்ரீ அகில சந்திர தத்தர் கொண்டுவந்த பிரேரணை நிராகரிக்கப்பட்டது. அவர் பேசுகையில், ஹிந்துப் பெண்களுக்குப் புதிய உரிமை எதுவும் கிடைப்பதற்காக மசோதா கொண்டுவரப்படவில்லை யென்றும், 1930ம் வருஷத்திய ஹிந்து ஸ்திரீகள் சொத்துரிமைச் சட்டத் திருத்தப் பிரகாரம் ஹிந்து ஸ்திரீகள் இழந்திருக்கும் உரிமைகள் மீண்டும் அவர்களுக்குக் கிடைக்க வேண்டுமென்பதே மசோதாவின் நோக்கமென்றும், பொது ஜனங்களில் பலர் இதை ஆதரிப்பதாயும், கூறினர். சர்க்கார் சார்பில் பதிலளிக்கையில் ஹிந்து வக்கீல்களைக் கொண்ட ஒரு கமிட்டி நியமிக்க உத்தேசித்திருப்பதாகத் தெரிவிக்கப்பட்டது.

### விவாஹ ரத்து உரிமை

விவாகமான ஹிந்து ஸ்திரீகளுக்குத் தனியே, வசிப்பதற்கும் ஜீவனம்சம் பெறுவதற்கும் உரிமை வேண்டுமெனக் கோரியும், விவாகரத்து உரிமை கோரியுமுள்ள மசோதாக்களை ஸ்ரீ தேஷ்முக் ஆஜர்ப்படுத்தினர்.

### யுத்தத்துக்குத் தண்டவாளங்கள்

அங்கத்தினர்கள் கேட்ட கேள்விகளிலிருந்தும் சர்க்கார் சார்பாக அளிக்கப்பட்ட பதில்களிலிருந்தும், சர்க்கார் சில ரயில்வே லைன்களை எடுத்து விட்டனரென்றும், இன்னும் சில லைன்களை எடுக்க உத்தேசிக்கின்றன ரென்றும் அந்தத் தண்டவாளங்கள் யுத்தத்தை முன்னிட்டு இங்கிலாந்துக்கு அனுப்பப் படுகின்றன வென்றும் தெரிகிறது.

### மகாத்மா—ராஜாஜி சந்திப்பு
#### ஸ்ரீ கிரியும் சந்தித்தார்

நவம்பர் 24உ பிற்பகல் சென்னை மாகாண மாஜி பிரதம மந்திரி ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் சில மணி நேரம் மகாத்மாவுடன் சம்பாஷித்தார். மாஜி தொழில் மந்திரி ஸ்ரீ வி. வி. கிரியும் காந்திஜியைச் சந்தித்தார்.

### வைஸ்ராய் சிபார்சுடன் வந்த வரி மசோதா நிராகரிக்கப்பட்டது

வைஸிராய் சிபார்சுடன் கூடிய வரி மசோதா மீண்டும் இந்திய சட்ட சபையின் பரிசீலனைக்கு வந்தது. அதற்குச் சாதகமாக 53 ஓட்டுகளும் பாதகமாக 55 ஓட்டுகளும் கிடைக்கவே மீண்டும் நிராகரிக்கப்பட்டது. முஸ்லிம் லீக் கட்சியினர் நடு நிலைமை வகித்தனர்.

## ஜெர்மனியின் 'ஐரோப்பா' கப்பல் தாக்குண்டது

"ஐரோப்பா" என்பது ஜெர்மனியின் பெரிய கப்பல். இது பிரிட்டிஷ் குண்டால் தாக்குண்டதாகச் சொல்லப்படுகிறது.

### கப்பல் கம்பெனிகள் நாசம்

19உ மேற்கு மிட்லண்டில் ஒரு நகரம் மிகக் கடுமையாகத் தாக்கப்பட்டது. பல வீடுகள் சேதமுற்றன. 50 கப்பல் கம்பெனி ஆபீஸ்கள் தகர்ந்தன.

பிரிட்டிஷ் விமானங்கள் பெர்லினிலுள்ள ஆயுதக் கிடங்குகளைத் தாக்கின. பல துறைமுகங்களும் தாக்கப்பட்டன. மூன்று பிரிட்டிஷ் விமானங்கள் திரும்ப வில்லை.

### 3 கப்பல்கள் மூழ்கின

அயர்லாந்துக்கு 400-மைல்களுக்கப்பால் இரண்டு பிரிட்டிஷ் கப்பல்களும், ஒரு ஸ்வீடிஷ் கப்பலும் டார்ப்பிடோ பிரயோகத்தால் மூழ்கடிக்கப் பட்டதாகத் தெரிகிறது

### பயத்தினால் தற்கொலை

22உ இரவு ஒரு ஜெர்மன் கப்பல் தன்னைத் தானே மூழ்கடித்துக் கொண்டது. வேறொரு கப்பல் காட்டிய சர்ச்லைட் சமிக்ஞையை பிரிட்டிஷ் கப்பல் சமிக்ஞை என எண்ணி பீதிகொண்டே தற்கொலைசெய்து கொண்டதாம்.

23உ லண்டன் இந்திய ஸ்டோர்ஸ் இலாகாக் கட்டடங்கள் ஜெர்மன் குண்டு வீச்சால் சேதமுற்றதாக அறிவிக்கப்படுகிறது.

24உ "கிங்ஸ்டன்" "சௌ லேட் ரீடு" என்ற 2 சிறிய பிரிட்டிஷ் கப்பல்கள் விரோதிகளது நடவடிக்கையால் மூழ்கிப் போயின.

### பர்லின் மீது குண்டுவீச்சு.

பிரிட்டிஷ் விமானங்கள் பர்லின் சென்று பல இடங்களைத் தாக்கின. டூரினும் தாக்கப்பட்டது. விமானத் தளங்களும், கூட்ஸ் யார்டுகளும், ஸ்டேஷன்களும் தாக்கப்பட்டன. பல இடங்களில் தீப்பற்றிக்கொண்டது. மிகுந்த சேதம்.

பிரிட்டனில் வீசப்பட்ட ஜெர்மன் குண்டு வீச்சின் காரணமாக போலீசாரில் 80 பேர் கொல்லப்பட்டும், 400 பேர் காயம் பட்டும் போனதாக அறிவிக்கப்படுகிறது.

தாரசோ துறைமுகத்தை பிரிட்டிஷ் விமானப் படைகள் தாக்கிய போது 10000 டன் எடையுள்ள கப்பல் ஒன்றின் மீதும் மற்றொரு சிறிய கப்பல் மீதும் குண்டுகள் விழுந்தன. ஹாலந்திலுள்ள துறைமுகமும் விமானக்கூடமும், ஹாம்பர்கிலுள்ள கப்பல் கட்டுமிடங்களும் பிரிட்டிஷ் விமானங்களால் தாக்கப்பட்டன.

## கோரிட்ஸாவை இத்தாலியர் கைவிட்டனர்

கிழக்கு லிபியாவில் நடந்த விமானப் போராட்டத்தில் 10 இத்தாலிய விமானங்கள் நாசமாயின. 22உ பகல் கோரிட்ஸாவை இத்தாலியர் கைவிட்டு விட்டனர். கிரேக்கர்கள் வெற்றிக் கோலத்துடன் நகருக்குள் பிரவேசித்தனர். கிரேக்கப் படைகள் வெகு வேகமாக முன்னேறுகின்றன. ஆயிரக்கணக்கான இத்தாலியர்களை கிரேக்கர்கள் சிறைப்பிடித்து விட்டதாக ஒரு செய்தி கூறுகிறது.

### மூலஸ்தானம் பிடிபட்டது

25உ அர்கிரோ காஸ்டிரோ என்ற நகரின் வெளிப்பகுதிகளுள் கிரேக்க முன்னணிப்படை புகுந்துவிட்டது. இந்த இடம் இத்தாலியருக்கு சப்ளை மூலஸ்தானமாக இருந்தது. மற்றும் இரு நகரங்கள் கிரேக்கர் வசமாயின. இத்தாலியரின் பீரங்கிகளும் லாரிகளும் கிரேக்கர் வசமாயின.

### இத்தாலியர்கள் அக்கிரமம்

இத்தாலியர்கள் உணவுப் பொருள்களை அழித்து கிராமவாசிகளைக் கொன்று கிரேக்க முன்னேற்றத்தைத் தடுக்க முயற்சிக்கின்றனர்.

1500 இத்தாலியர்கள் கைது செய்யப்பட்டு விட்டதாக இத்தாலிய அறிக்கையே கூறுகிறது.



## சத்தியாக்கிரகம்

### ஸ்ரீ மொரார்ஜி தேசாய்

பம்பாய் மாஜி ரெவின்யூ மந்திரி ஸ்ரீ மொரார்ஜி தேசாய் 20உ கைது செய்யப்பட்டார். இவர் சத்தியாக்கிரகம் செய்யப் போவதாக கோட்டீஸ் கொடுத்திருந்தார்.

### அகில இந்திய முதல் ஸ்திரீ சத்தியாக்கிரகி

மிஸ் பிரேமா காந்தக் புனேவுக்கருகிலுள்ள வெஸ்வாத் என்னுமிடத்தில் 20உ பிரசங்கம் செய்து சத்தியாக்கிரகம் புரிந்தார். 21உ காலை கைது செய்யப்பட்டார், தற்பொழுது நடக்கும் சத்தியாக்கிரக இயக்கத்தில் முதலில் சிறை செல்லும் ஸ்திரீ இவர். இவருக்கு 200 ரூபா அபராதம் விதிக்கப்பட்டது. அபராதம் செலுத்தத் தவறினல் மூன்று மாத தண்டனை அனுபவிக்கத் தீர்ப்புக் கூறப்பட்டது. இவர் 'ஏ' வகுப்புக் கைதியாக நடத்தப்படுவார்.

### ஸ்ரீ பி. ஜி. கேர்.

பம்பாய் மாஜி பிரதம மந்திரி ஸ்ரீ பி. ஜி. கேர் 21உ அவருடைய வாசஸ்தலத்தில் கைது செய்யப்பட்டார், இவர் நோட்டீஸ் கொடுத்திருந்தபடி பிரசங்கம் செய்யப் புறப்பட்டபோது கைது செய்யப்பட்டார். இவர் தற்போது விசாரணையின்றி தாணு ஜெயிலில் 14 நாட்களுக்குக் காவலில் வைக்கப்பட்டிருப்பார். இவர் கைதியானது குறித்துப் பம்பாயில் மார்க்கெட்டுகள் மூடப்பட்டன.

### மாஜி கல்வி மந்திரி

மத்திய மாகாணத்தில் கல்வி மந்திரியாக விருந்த ஸ்ரீ எஸ். டி. கோகலே 21உ காலை பிரதாப் சதுக்கத்தில் யுத்த எதிர்ப்புக் கீதங்களைப் பாடி சத்தியாக்கிரகம் செய்தார். உடனே கைது செய்யப்பட்டார். இவருக்கு ஒரு வருஷ கடின காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

### இரண்டு மந்திரிகள்

21உ சத்தியாக்கிரகம் செய்து கைது செய்யப்பட்ட ம. மா. மாஜிமந்திரிகள் ஸ்ரீ வி. கே. பருக்காவுக்கும் பண்டித் தவாரக பிரஸாத மிஸ்ராவுக்கும் ஒருவருட கடினகாவல் தண்டனை விதிக்கப்பட்டது.

### ஐ. மா. மாஜி பிரதம மந்திரி

ஐக்கிய மாகாண மாஜி பிரதம மந்திரி பண்டித கோவிந்த வல்லப பந்த்24உ மாலை 3-40 மணிக்கு யுத்த எதிர்ப்புக் கோஷங்களைச் செய்ததற்காகக் கைது செய்யப்பட்டார். 25உ ஒரு வருஷ வெறுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

### சர்தார் படேலின் குமாரி

24உ சர்தார் படேலின் குமாரியான ஸ்ரீமதி மணிபென் படேல் யுத்தத்துக்கு விரோதமாக கோஷமிட்டதற்காகக் கைது செய்யப்பட்டார்.

### மாஜி ஸ்தலஸ்தாபன மந்திரி

பம்பாய்க் கவர்ன்மெண்டு ஸ்தல ஸ்தாபன மந்திரியாக விருந்த ஸ்ரீ படேல் கைது செய்யப்பட்டு ஒரு வருஷக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார்.

### டாக்டர் கட்ஜூ

ஐக்கிய மாகாண மாஜி நீதி மந்திரியான டாக்டர் கைலாசநாத் கட்ஜூவை அவரது வீட்டில் 26 காலை போலீசார் கைது செய்தனர்.

### தமிழ் நாட்டில்

### டாக்டர் ராஜன்

சென்னை சர்க்காரின் மாஜி சுகாதார மந்திரி டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் 19உ இரவு 7-45 மணிக்கு அவரது வாசஸ்தலத்தில் கைது செய்யப்பட்டார், காலை அவர் யுத்தக் கமிட்டியில் பிரபலஸ்தரான 15-பேர்களுக்குத் தாமே நேரில் சென்று கடிதங்களைக் கொடுத்துச் சத்தியாக்கிரகம் செய்தார். தமிழ் நாட்டில் முதல் சத்தியாக்கிரகி இவர்.

(தமிழ்நாட்டில் நடந்த சென்ற உப்பு சத்தியாக்கிரகமும் டாக்டர் ராஜன் பங்களாவிலிருந்து தான் ஆரம்பமாயிற்று). 25உ ஒரு வருஷக் கடுங்காவலும் ரூ 1000 அபராதமும், அபராதம் செலுத்தத் தவறினல் மேற்கொண்டு 6 மாதக் கடுங்காவல் அனுபவிக்க வேண்டு மென்றும் தீர்ப்புக் கூறப்பட்டது. 'ஏ' வகுப்புக் கைதியாக நடத்தப்படுவார்.

### சென்னையின் முதல் ஸ்திரீ சத்தியாக்கிரகி

சென்னை சட்டசபை உப தலைவியும், கார்ப்பொரேஷன் அங்கத்தினருமான ஸ்ரீமதி ருக்மணி லட்சுமிபதி 20உ சென்னை யுத்தக் கமிட்டி அங்கத்தினர்களுக்கும் மேயருக்கும் யுத்தத்தில் உதவி செய்யாமலிருக்கும்படிக் கேட்டு கடிதமெழுதி சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்தார். இவர் சென்னையின் முதல் ஸ்திரீ சத்தியாக்கிரகி. 21உ அவருடைய வாசஸ்தலத்தில் கைது செய்யப்பட்டார். கைது செய்யப்பட்டவுடன் அவர், இந்திய ஸ்திரீகள் அனைவரும் காந்திஜியைப் பின்பற்றி அவர் சொல்படி நடக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். இவர் ஒரு வருஷ வெறுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார். இவருக்குத் தற்காலிகமாக 'ஏ' வகுப்பு கொடுக்கப்பட்டது.

### ராமனுதபுரத்தில்

ராமநாதபுரம் நகரக் காங்கிரஸ் கமிட்டித் தலைவரும் ஸ்ரீ ராஜகுமார் ராஜா ராம் பாண்டியன் குமாரருமான பாஸ்கர நாத துரை யுத்த எதிர்ப்புப் பிரசார அறிக்கைகளை விநியோகித்ததற்காக 20உ கைது செய்யப்பட்டார்.

### திருச்சி நகர சபைத் தலைவர்

திருச்சி நகரசபைத் தலைவர் பி. ஆர் தேவர் யுத்தக்கமிட்டி அங்கத்தினர்களுக்குக் கடிதமெழுதி சத்தியாக்கிரகம் செய்ததற்காக 21உ கைது செய்யப்பட்டார். 22உ அவருக்கு ஒரு வருஷக் கடுங்காவல் தண்டனை அளிக்கப்பட்டது.

### ஸ்ரீ கேளப்பன்

ஜில்லா போர்டு மாஜி தலைவரும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினருமான ஸ்ரீ கேளப்பன் 21உ கொயிலாண்டியில் சத்தியாக்கிரகம் செய்ததற்காகக் கைது செய்யப்பட்டார். இவருக்கு ஒரு வருஷக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

### ஸ்ரீ பூவராகவன்

23உ தஞ்சையில் ஸ்ரீ வி. பூவராகவன் எம். எல். ஏ. தண்டுப் பிரசங்கம் வழங்கியதுபற்றி கைது செய்யப்பட்டார். இவர் ஒரு வருஷக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார்.

### மதுரை கிருஷ்ணசாமி பாரதி

23உ பகல் ஸ்ரீ எல். கிருஷ்ணசாமி பாரதி எம். எல். ஏ. சத்தியாக்கிரகம் செய்ததற்காக மதுரையில் தமது வீட்டில் கைது செய்யப்பட்டார்.

### ஸ்ரீ டி. பிரகாசத்துக்கு ஒரு வருஷ வெறுங் காவல்

சென்னை மாஜி ரெவின்யூ மந்திரியும் ஆந்திர மாகாணக் காங்கிரஸ் கமிட்டித் தலைவருமான ஸ்ரீ டி. பிரகாசம் 26உசென்னையில் சத்தியாக்கிரகம் செய்தார். அவர் வீதிவழியே தெலுங்கிலும் ஆங்கிலத்திலும் யுத்த எதிர்ப்புக் கோஷங்களைச் செய்தார். எஸ்பிளனேட் ரஸ்தாவில் கைது செய்யப்பட்டார். ஏராளமான ஜனங்கள் வந்திருந்து அவரை வழியனுப்பினர். ஸ்ரீ பிரகாசத்துக்கு ஒருவருஷ வெறுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. 'ஏ' வகுப்பில் வைக்கப்படுவார்.

### ஸ்ரீ காளேஸ்வர ராவ்

26உ இரவு 11 மணிக்கு மாஜி பிரதம பார்லிமெண்டரிக் காரியதரிசி ஸ்ரீ ஏ. காளேஸ்வர ராவ் பெஜவாடாவில் கைது செய்யப்பட்டார்.

### ஸ்ரீ கோபால் ரெட்டி

மாஜி மந்திரி ஸ்ரீ கோபால் ரெட்டி 26-உ காலை 10மணிக்கு தமது சொந்த கிராமமாகியபுச்சிரெட்டிபாளையத்தில்யுத்த எதிர்ப்புக் கோஷங்களை வெளியிட்டதற்காகக் கைதுசெய்யப்பட்டார். இவருக்கு ஒரு வருட கடுங்காவல் தண்டனையும் ரூ 1000 அபராதமும் விதிக்கப்பட்டது.

சென்னை மாகாண மாஜி தொழில் மந்திரி ஸ்ரீ வி. வி. கிரி நவம்பர் 30உயும் மதுரை நகர சபைத் தலைவர் ஸ்ரீ சுப்பராமன் டிசம்பர் 3உ யும் சத்தியாக்ரகம் செய்வார்கள்.

## போப்பாண்டவர் உண்ணாவிரதமிருப்பார்?

போப்பாண்டவர் உலகில் சமாதானம் ஏற்படுமாறு கடவுளைப் பிரார்த்திக்கும் பொருட்டு ஒரு வார காலம் உண்ணாவிரதமிருப்பாரென்று தெரிவதாக ரோம் ரேடியோ அறிவிக்கிறது. அவர் பேசுகையில் பின்வருமாறு தெரிவித்தார்: "மனிதரிடை சமாதான மென்பது மறைந்துவிட்டது. மீண்டும் சமாதானம் ஏற்படவேண்டுமென நான் பிரார்த்திக்கிறேன்."

## சாத்தூர் வக்கீல்மீது வழக்கு

### தொழிலிலிருந்து விலக்கப்பட்டார்

வக்கீல் தொழிற் சட்டத்தின்கீழ் கொண்டுவரப்பட்ட சில வழக்குகள் நவம்பர் 25உ சீப் ஜஸ்டிஸ், ஜஸ்டிஸ் கிருஷ்ணசாமி ஐயங்கார், ஜஸ்டிஸ் ஹாப்பல் ஆகியவர்கள் முன்பாக விசாரணைக்கு வந்தன.

முதல் வழக்கில் சாத்தூர் வக்கீலான ஸ்ரீ எஸ். கே. ஸ்ரீனிவாஸ சர்மாமீது கக்ஷிக்காரர் பணத்தை துர்விநியோகம் செய்த குற்றம் சாட்டப்பட்டிருந்தது. மேற்படி வக்கீல் தமது கக்ஷிக்காரருக்குச் சேரவேண்டிய ரூ. 568-2-0ஐ சாத்தூர் ஜில்லா முனிசீப் கோர்ட்டிலிருந்து வாங்கினரென்றும், ஆனல் ரூ.100 மாத்திரம்தான் கக்ஷிக்காரருக்குக் கொடுத்தாரென்றும், மீதிப் பணத்தைத் துர்விநியோகம் செய்தாரென்றும் கூறப்பட்டது. நீதிபதிகள் வக்கீல் மேற்படி குற்றத்தைச் செய்ததாகத் தீர்மானித்து அவரது பெயரை வக்கீல்கள் ஜாபிதாவிலிருந்து நீக்கிவிடும்படி உத்தரவிட்டார்கள்.

### கோஷங்கள் தான்

சத்தியாக்கிரகம் செய்பவர்கள் இனிமேல் யுத்த எதிர்ப்புப் பிரசங்கங்களைச் செய்ய மாட்டார்கள். கோஷங்களிடுவர். இம் மாதிரியே செய்யவேண்டுமென காந்தி முழுமையுமுள்ள எல்லா சத்தியாக்கிரக ஸ்தாபனங்களுக்கும் உத்தரவிடப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

### அமெரிக்கக் கப்பல் சரக்குகள் பறிமுதல்
#### ஜப்பானின் துணிவு

"டப்பர்", "வகியாஸ்" என்ற இரு அமெரிக்கக் கப்பல்களை அவை ஹெய்பாங்கிலிருந்து புறப்படவிருக்கையில் ஜப்பானியர்கள் பறிமுதல் செய்துவிட்டதாகத் தெரிகிறது.

### ராமனுதபுரம் ஜில்லா கலெக்டர்

மிஸ்டர் எஸ். ஜி. கிரப் ஸ்தல ஸ்தாபன இன்பெக்டராக ஆக்ட் செய்ய நியமிக்கப்பட்டிருப்பதால் அவருக்குப் பதிலாக ராவ் சாஹிப் வி. திருவேங்கட முதலியார் ராமனுதபுரம் ஜில்லாக் கலெக்டராக நியமிக்கப்பட்டிருக்கிறர்.

### கஞ்சம் பப்ளிக் பிராசிகியூட்டர் ராஜிநாமா

பண்டித ஜவஹர்லால் நேரு கைது செய்யப்பட்டதையும் சர்க்காரின் யுத்தக் கொள்கையையும் கண்டிப்பதற்காக கஞ்சம் பப்ளிக் பிராசிகியூட்டர் ஸ்ரீ உமா சரண் பட்னுயக் தமது பதவியை ராஜிநாமா செய்து விட்டார்.

### பிரிட்டனின் தினசரி யுத்தச் செலவு 91 லட்சம் பவுன்

பிரிட்டிஷ் பொக்கிஷ மந்திரியான சர் கிங்ஸ்லீவுட் காமன்ஸ்ஸபையில் பேசுகையில் யுத்தத்தின் 2வது வருஷத்தில் முதல் 77 தினங்களில் தினம் 91 லட்சம் பவுன் வீதம் செலவு செய்யப்பட்டிருக்கிறது என்று தெரிவித்தார்.

### ஆகாய விமானச் சேதம்

யுத்த ஆரம்பத்திலிருந்து இதுவரை ஜெர்மனிக்கும் பிரிட்டனுக்கும் ஏற்பட்டுள்ள ஆகாய விமானச் சேதம்:

| | |
|---|---|
| ஜெர்மன் | 2,921 |
| பிரிட்டிஷ் | 818 |

அ. இ. கா. காரியக் கமிட்டி அங்கத்தினர் ஸ்ரீ சங்கர லால் தேவ் டிசம்பர் 1உயும், மாஜி ஒரிசா பிரதமமந்திரி ஸ்ரீ விஸ்வநாத தாஸ் 4உயும், 10உக்குள் பீகார் மாஜி மந்திரிகளும் பார்லிமெண்டு காரியதரிசிகளும் சத்தியாக்கிரகம் செய்வார்கள். பல இடங்களிலிருந்து சத்தியாக்கிரகிகள் ஜாபிதா தயாரிக்கப்பட்டு மகாத்மாவின் அனுமதிக்காக அனுப்பப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

## தந்திச் செய்தி

### ரெங்கூன் மார்க்கெட்

ரெங்கூன், நவ. 27உ

| | |
|---|---|
| ஙசேன் நெல் | 142/144 |
| மீடான் | 162/164 |
| சுசுதி வெள்ளை | 400/405 |
| முழுப் புழுங்கல் | 292/8 |
| நிர் 1 மில்சார் டிசம்பர் | 340 |
| நிர் 1 மில்சார் ஜனவரி | 342-8 |
| நிர் 1 மில்சார், பிப்ரவரி, மார்ச், ஏப்ரல் | 305 |

### சென்னை மார்க்கெட்

சென்னை, நவ. 26உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் (மொத்த விலை) | 28 | 6 | 0 |
| சவரன் (சில்லறையில்) | 28 | 6 | 6 |
| முசை தோலா 1க்கு | 41 | 3 | 0 |
| வெள்ளி செடி 100 தோலா | 62 | 10 | 0 |
| வெள்ளி ரூபாய் எடை | 0 | 10 | 6 |

### லண்டன் ரப்பர்

லண்டன், நவ. 25உ

ரப்பர் ராத்தல் ஒன்றுக்கு 11½ பென்ஸ்.

### சிங்கப்பூர் ரப்பர்

சிங்கப்பூர், நவ. 23உ

ரப்பர் பீக்கல் ஒன்றுக்கு 51 வெள்ளி 16 சென்

### கொழும்பு ரப்பர்

கொழும்பு, நவ. 23உ

| | |
|---|---|
| கிரேப் ரப்பர் | 58 சதம் |
| ஷீட் ,, | 58 ,, |

### கொப்பரா

முதல் தரம் ரூ. 32-00

### சென்னை கவர்னர் யுத்த நிதி

யுத்தநிதிக்கு 25உ வரை இம்மாகாண ஜில்லாக்களிலிருந்து மொத்தம் ரூ. 60,51,510-14-8 வருவாயிருக்கிறது.

### கம்பை தனவைசியர் கல்விக் கழகம்
#### வருஷாந்திரப் பொதுக்கூட்டம்

நாளது விக்கிரம வருஷம் ஐப்பசி மீ 30உ (15-11-40) வெள்ளிக்கிழமை மாலை 3 மணிக்கு கல்வி நிலயத்தில் பொதுக் கூட்டம் ஆரம்பமானது. உள்ளூரிலிருந்தும் அயலூரிலிருந்தும் பல அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தனர். கல்வி நிலய மாணவர்களால் கடவுள் வணக்கம் செய்யப்பட்டபின், தலைவர் திரு. ராம. அரு. அரு. ராம. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் தலைமை வகித்தார்கள். தலைவர் அவர்கள் முகவுரையில் சென்ற ஆண்டு கல்விக் கழக வேலையைப்பற்றி சிறப்பாக்க கூறினர்கள். காரியதரிசி மெ. நடராஜன் செட்டியார் அவர்கள் சிறிது பேசினர்கள். பின்னர் சென்ற ஆண்டு வரவு செலவுக் கணக்கு, ஐந்தொகை, ஆடிட்டர் ரிப்போர்ட், கல்வி நிலய அறிக்கை வாசிக்கப்பெற்றன. கூட்டத்திற்குப் பிறகு மாணவர்களால் சாவித்திரி என்னும் நாடகம் நடத்தப்பெற்றது. வந்தனோபசாரத்துடன் கூட்டம் இனிது நிறைவுற்றது.

#### உத்தியோகஸ்தர்கள்.

தலைவர்: திரு. அழ. வீர. பெ. லெட்சுமணன் செட்டியார் அவர்கள், உபதலைவர்: திரு. சி. ராம. கா. கா. ராமசாமி செட்டியார் அவர்கள், பொக்கிஷதார்: திரு. மெ. செ. மெ. மெ. கருப்பஞ் செட்டியார் அவர்கள், காரியதரிசி: திரு. மெ. நடராஜன் செட்டியார் அவர்கள் D. Com. F. C. I. 24 அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

### ஸ்ரீமதி சுப்பராயன் சத்யாக்ரஹம் காரைக்குடியில் நடக்கும்

ஸ்ரீமதி ராதாபாய் சுப்பராயன் எம். எல். ஏ. (சென்ட்ரல்) தமிழ் நாட்டில் சத்தியாக்கிரஹம் செய்யும் இரண்டாவது பெண்மணி யென்று தெரிகிறது. அவர் காரைக்குடியில் சத்யாக்ரஹம் செய்வார்.

—"தினமணி"

# நோட்டீஸ்

## சிவகெங்கை
## டி. முன்சீப் கோர்ட்டு

O. S. No. 187 of 1940.

சித. கண. சுப. சோம சுந்தரம் செட்டியார் } வாதி.

சமயணன் சேருவை வகையரு. } பிரதி வாதிகள்.

ஷை நிம்பர் 1, 6 பிரவாதிகளான சமயணன் மீனுட்சி இவர்களுக்கு தெரிவிக்கும் நோட்டீஸ்:—

வாதிக்கு 16-8-1927ல் ரூ. 700-க்கு உபயம் தருவதாகக் கண்டு 1, 2 பிரதி வாதிகளின் சிறிய தகப்பனும் 6-ம் பிரதிவாதியின் புருஷனுமான ராமசாமி அம்பலம் ஈடுகண்டு எழுதிக் கொடுத்திருக்கும் ரிஜிஸ்ட்டர் ஈடுகடன் தஸ்தவேஜின் அசலையும் பின் வட்டியையும் வரப்பற்ற ஷை ராமசாமி அம்பலம் வார்சுகளான உங்கள் பேரிலும் மற்ற பிரதிவாதிகள் பேரிலும் இந்த நிம்பரில் வியாஜ்ஜித்து ஷை வியாஜ்ஜியமும் 9-12-1940உ வாயிதா ஏற்பட்டிருப்பதில் அன்று முற்பகல் 10-மணிக்கு இந்தக் கோர்ட்டு முன்பாக நேரிலாவது வக்கீல் மூலமாவது ஆஜராகி உங்களுக்குள்ள ஆட்சேபனைகளை தெரிவிக்காவிடில் ஷை கேசை ஒருதலை பக்ஷமாக விசாரித்து தீர்மானிக்கப்படுமென்பதை அறியவும்.

M. S. ராமஸ்வாமி அய்யர்,
வாதிவக்கீல்.

சிவகங்கை, }
25-11-40. }



### இந்தியாவில் மோட்டார் தொழிற்சாலை

21உ ராஜாங்க சபைக் கூட்டத்தில் இந்தியாவிலேயே மோட்டார்களும் விமானங்களும் உற்பத்தி செய்ய சர்க்கார் தக்க வழி தேட வேண்டுமென பண்டித குன்ஸ்ரு கொண்டுவந்த தீர்மானம் நிறைவேறியது.

### அண்ணமலை சர்வகலாசாலை
### ஹாஸ்டலில் போலீஸ் சோதனை

இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் 21உ மாலை போலீசார் அண்ணமலை சர்வகலாசாலை மாணவர்கள் ஹாஸ்டல் அறைகளில் சோதனை செய்தார்கள். போலீசார் சோதனை யிடுவதை மாணவர்கள் ஆட்சேபித்தன ரென்றும், சாதாரண உடையிலிருந்த கான்ஸ்டேபிளுக்கு கல் வீச்சால் காயம் ஏற்பட்டதாயும் சொல்லப்படுகிறது. இருட்டி விட்டதால் போலீசார் புறப்பட்டு விட்டனர். மாணவர்கள் ஒன்று கூடி உப அத்யக்ஷகரிடம் முறையிட்டுக் கொண்டனர். அவர் மாணவர்கள் பொறுமையாயிருந்தால் தாம் விசாரித்துத் தக்கது செய்வதாகச் சொன்னார்.

## ஜின்னாவின் தாராளம்!

முஸ்லிம் லீக் தலைவர் ஜனப் ஜின்னா டில்லியில் முஸ்லிம் மாணவர்கள் மகாநாட்டில் பேசுகையில் பின்வருமாறு குறிப்பிட்டார்:

ஹிந்துக்கள் ஹிந்து ராஜ்யத்தை ஸ்தாபிக்கும் கனவை மறந்துவிட வேண்டும். தேசத்தை ஹிந்து தேசமென்றும் முஸ்லிம் தேசமென்றும் பிரிக்க ஒப்புக்கொள்ள வேண்டும். இன்று நாம் தேசத்தில் கால் பாகத்தை எடுத்துக்கொண்டு மீதி முக்கால் பாகத்தை அவர்களுக்கு விட்டுவிட சம்மதிக்கிறோம். அவர்கள் மேற்கொண்டு பேரம் பேச நினைத்தால் முக்கால் பாகமும் அவர்களுக்குக் கிடைப்பது குதிரைக் கொம்பாகி விடும். இன்று நமது லக்ஷியம் பாகிஸ்தான். அதற்காக நாம் உயிரை விடவும் தயார்.

### கோஷா ஸ்திரீகளுக்கு விளையாட்டு மைதானம்

கோஷா ஸ்திரீகளுக்கு விளையாட்டு வசதிகள் அளிப்பதற்காக சென்னை ஜார்ஜ் டவுணிலுள்ள விளையாட்டு மைதானத்தை வாரத்தில் ஒருநாள் கோஷா ஸ்திரீகளுக்கென்று பிரத்யேகமாக அனுமதிக்க வேண்டுமென்று, மேயர் கமிஷனரை வேண்டிக் கொண்டிருக்கிறார்.

### சிவகெங்கைத் தாலூகாவில் விலைவாசிகள் நிர்ணயம்

தேவகோட்டை ரெவினியு டிவிஷனல் ஆபீசர் ஸ்ரீ K. S. சுந்தரய்யர் அவர்கள் B. A. தலைமையின் கீழ் 18—11—40ல் கூடிய விலை நிர்ணயக் கமிட்டிக் கூட்டத்தில் நிர்ணயிக்கப்பட்ட விலைவாசிகள்:-

| | | |
|---|---|---|
| நெல் முதல் தரம் | ரூ 1க்கு | $9\frac{1}{2}$ படி |
| ஷை இரண்டாம் தரம் | | — |
| புழுங்கலரிசி | ,, | $5\frac{1}{4}$ ,, |
| மதிய சம்பா | | — |
| கார் அரசி | ,, | $5\frac{3}{8}$ ,, |
| குருணை $\frac{1}{4}$ உடைப்பு | ,, | 6 ,, |
| ஷை $\frac{1}{2}$ உடைப்பு | ,, | 5 ,, |
| இராகி | ,, | 10 ,, |
| துவரம் பருப்பு | ,, | $4\frac{1}{4}$ ,, |
| உளுத்தம் பருப்பு | ,, | $3\frac{1}{4}$ ,, |
| பாசிப்பருப்பு | ,, | $4\frac{3}{8}$ ,, |
| கடலை | ,, | $4\frac{3}{4}$ ,, |
| ஷை பருப்பு | ,, | 4 ,, |
| காணம் | ,, | $7\frac{1}{2}$ ,, |
| மல்லி | ,, | $6\frac{1}{2}$ ,, |
| உப்பு | ,, | $10\frac{1}{2}$ ,, |
| சர்க்கரை பழுப்பு | வீசை | 0-4-0 |
| நாட்டு சர்க்கரை | ,, | 0-7-6 |
| அஷ்டகிராம் | ,, | 0-6-9 |
| மிளகாய் வத்தல் | ,, | 0-7-0 |
| தீப்பெட்டி | | 0-0-3 |
| திருப்பூர் 4 முழம் வேஷ்டி | 1க்கு | 0-8-0 |
| மண்ணெண்ணெய் பாட்டில் | 1க்கு | 0-2-9 |

### 'தனவணிகர் தன்மை'யைப்பற்றி சுவாமி சுத்தானந்த பாரதியார் கருத்து

"தனவணிகர் தன்மை" என்னும் நூலைக் குறித்துப் புதுவை சுவாமி சுத்தானந்த பாரதியார் அதன் ஆசிரியரான தேவகோட்டை ஸ்ரீ ஆர் எம். எல் எம். கதிரேசனுர்க்குக் கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளார்:—

"தனவணிகர் தன்மை" சொக்கழகாய் அமைந்திருக்கிறது. தமிழன் ஒரு காரியத்தை நன்றாகச் செய்தால் மகிழ்ச்சி பொங்குகிறது. 'செய்வன திருந்தச் செய்' என்பது தமிழ் மறைமொழி. அச்சொல்லைத் தங்கள் நூல் விளக்குகிறது. தங்கள் நூல் தனவணிகருக்குப் புதிய எழுச்சியும் செயலாற்றலும் கல்கும்; நல்குக. சிறுவயதில் காளையார் கோயில் திருநாளில் ஜமீந்தார் அள. அரு. அரு. தம்பி நாராயணஞ் செட்டியாருக்காகப் பாடிய ஒரு பாட்டு நினைப்பு வருகிறது:

"செல்வப் புதல்வர் சிவனடியார் செந்தமிழர்
கல்வி மணம்பரப்புங் கற்பகங்கள்—
எல்லாரும்
இன்புற் றிருக்கவே ஈகை மிகச் செய்வார்
அன்புத் தனவணிக ராம்"

இதையே தங்கள் அருமை நூலுக்கு அன்பளிப்பாகக் கொள்க!

## சிசுவின் மேல் நாகம்

கோயமுத்தூர் லோடஸ் மில்லுக்கு அருகிலுள்ள பேச்சாம்பாளையத்தில் ஒரு அதிசய சம்பவம் நடந்திருக்கிறது. சென்ற 6-உ இக்கிராமத்தில் ஸ்ரீ ராஜகோபால் என்பவருக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அன்று பக்கத்தில் ஓர் கோவிலில் நடந்த கும்பாபிஷேகத்தின் அதே லக்னத்தில் இக் குழந்தை பிறந்ததாகக் கூறப்பட்டது. 9-உ மாலை தயார் குழந்தையை வீட்டில் ஒரு ஜமுக்காளத்தின்மீது விட்டிருந்தார். திரும்பி வந்தபொழுது குழந்தையின் மார்பின்மீது ஓர் நாகம் படம் எடுத்து ஆடிக்கொண்டிருந்ததைப் பார்த்தார். உடனே பயந்து அக்கம்பக்கத்தில் கூறினார்; முடிவில் சாம்பிராணி தீபம் காட்டவே சர்ப்பம் கீழே இறங்கி மெதுவாக வெளியே சென்றுவிட்டது. குழந்தையை ஒன்றும் செய்யவில்லை.

### பண்டித நேரு தண்டனை
### இலங்கையர் ஆட்சேபம்

பண்டித நேரு தண்டிக்கப்பட்டதைக் கண்டிப்பதாக, கொழும்பில் சிங்களவர் நிறைந்த ஒரு பெருங் கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### பிரிட்டனுக்கு
### இந்தியத் தொழிலாளிகள்

இந்தியாவின் கைத்தொழிலை அபிவிருத்தி செய்யத் தயாரிக்கப்பட்டிருக்கும் திட்டத்தைப்பற்றி பிரிட்டிஷ் தொழில் மந்திரி பேசுகையில், இந்தத் திட்டத்தின்கீழ் இந்தியாவிலிருந்து நூற்றுக் கணக்கான தொழிலாளர் பிரிட்டனுக்குக் கொண்டு போகப்பட்டு அங்கிருக்கும் தொழிற்சாலைகளில் பயிற்சி அளிக்கப்பட்டு மீண்டும் இந்தியாவுக்கு அனுப்பப்படுவார்கள் என்றும், அவர்களுக்குப் பிரிட்டிஷ் தொழிலாளருக்குக் கொடுக்கப்படும் சம்பளமே கொடுக்கப்படுமென்றும் தெரிவித்தார்.

### படகு கவிழ்ந்து 9 பேர் மரணம்
### சாத்தூரில் சம்பவம்

நவம்பர் 18உ யன்று பிற்பகலில் சாத்தூர் ஆற்றில் ஆறு ஆடவர்கள், ஒரு பெண், படகோட்டிகள் இருவர் ஆக 9 பேர்களை ஏற்றிவந்த படகு கவிழ்ந்து 9 பேர்களும் மாண்டதாகத் தகவல் கிடைத்திருக்கிறது.

### ஸ்தல ஸ்தாபன இன்ஸ்பெக்டர்

தற்பொழுது பொது மராமத்து இலாகா காரியதரிசி யாயுள்ள ஸ்ரீ கே. ராமுண்ணி மேனேன் ஐ. சி. எஸ். ரஜாவில் சென்று திரும்பி வந்ததும் ஸ்தலஸ்தாபன இன்ஸ்பெக்டராக நியமிக்கப் படுவார். அவரது ரஜா காலத்தில் தற்பொழுது ராமநாதபுரம் ஜில்லா கலெக்டராயிருக்கும் மிஸ்டர் டி. சி. கிரப் அவருக்குப் பதிலாக ஆக்ட் செய்வார்.

### போவால் சந்நியாசி வழக்கு
### "சந்நியாசிதான் ராஜகுமாரர்"

போவால் சந்நியாசி அப்பீல் வழக்கில் நவம்பர் 25உ தீர்ப்புச் சொல்லப்பட்டது. வாதி சந்நியாசிதான் போவால் சமஸ்தான இரண்டாவது ராஜகுமாரர் என முடிவு கூறி ராணி விபவாவதி தேவியின் அப்பீலை கோர்ட்டார் தள்ளிவிட்டனர். இதன் மூலம் கீழ்க் கோர்ட்டுத் தீர்ப்பு ஊர்ஜிதம் செய்யப்பட்டது. இங்கிலாந்திலிருந்து ஜஸ்டிஸ் காஸ்டிலோ எழுதி அனுப்பிய தீர்ப்பு செல்லுமென்று முடிவுசெய்யப்பட்டதால் மெஜாரிட்டி அபிப்பிராயத்துக் கிணங்க மேற்கண்டவாறு தீர்ப்புக் கூறப்பட்டது.

### இரவில் குண்டு வீசும் கொடுமை

இராக்காலத்தில் விமானங்கள் குண்டு வீசுவதைத் தடுக்கக் கூடிய முறை இப்பொழுது பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் அபிவிருத்தி செய்யப்பட்டு வருவதாகத் தெரிகிறது. இராக்காலத்தில் வரும் விமானங்களை அழிக்கக் கூடிய சக்தி கண்டு பிடிக்கப்பட்டு விட்டதென்றும் அதைப் பெருவாரியாக உற்பத்தி செய்யவே இப்பொழுது முயற்சிக்கப்படுகிற தென்றும் கருதப்படுகிறது.

"இந்தியா ஒரு அடிமை நாடாக இருக்கும் வரை கைத்தொழில் அபிவிருத்தியோ பொருள் செழிப்போ ஏற்படாது"
—ஐ. மா. மாஜி மந்திரி ஸ்ரீ சம்பூர்ணனந்தர்






### சட்டமறுப்பு இயக்கம்பற்றி இந்தியா மந்திரி

20உ காமன்ஸ் சபையில் இந்தியாவின் யுத்த முயற்சிகளைப்பற்றி விவாதம் நடந்தது. இதற்கு விடையளிக்கையில் இந்தியா மந்திரியான மிஸ்டர் அமெரி கூறியதாவது.

"நாளைய தினமே இந்தியாவுக்குச் சுதந்தரம் தருவதாக அறிவித்த போதிலும் இந்தியா பல வருஷங்கள் வரை ராணுவத்திலும் ஆகாயப்படையிலும் பிரிட்டிஷாரை நம்பியிருக்க வேண்டியிருக்கும். காங்கிரஸ் தனக்கு உண்மை அதிகாரத்தையும் பொறுப்பையும் அளிக்கும் சந்தர்ப்பத்தை நிராகரித்து விட்டது."

பண்டித நேருவுக்குக் கடுந்தண்டனை விதித்தது முட்டாள்த்தனமென்று ஒருவர் கூறினார்.

இந்தியா மந்திரி மேற்கொண்டு பதிலளிக்கையில், காங்கிரஸ் செய்யும் சத்தியாக்கிரகம் சமாதான தத்துவங்களைப் போதிப்பதற்கான இயக்கமல்ல என்று குறிப்பிட்டார். நேருஜி தண்டிக்கப்பட்டது சட்டத்தைப் பொறுத்த தென்று கூறினார். இந்தியா மந்திரி இந்தியாவுக்கு நேரில் போகவேண்டுமென்று ஒருவர் கூறியதற்கு, அமெரி, தாம் இந்தியா செல்வதால் பிரயோசன மில்லை யென்று தெரிவித்தார்.



[4-ம் பக்கத் தொடர்ச்சி]

தேவைப்பட்ட விவரங்களும் 'ரிஜிஸ்திரார் ஆவ் பிஸினஸ் நேம்ஸ், சுப்ரீம் கோர்ட்டு, சிங்கப்பூர்' இடமிருந்து பெற்றுக் கொள்ளலாம்; பூர்த்தி செய்த பாரங்களையும் மேலே சொன்ன விலாசத்துக்கே ஆள் மூலமாகவோ, ரிஜிஸ்தர் தபால் மூலமாகவோ ஏற்பட்டுள்ள கட்டணத்துடன் அனுப்பி வைக்க வேண்டியது.

## தொழிற் பெயர்ப் பதிவுச் சட்டம்

1940-ஹூ ஆகஸ்டு-மீ 26உ காலனி சட்டசபையில் மேற்கண்ட சட்டம் நிறைவேறியது. ஆகஸ்டு மீ 29உ மேன்மை தங்கிய சர்க்கார் நிர்வாக அதிகாரி அச்சட்டத்திற்குத் தமது சம்மதத்தை யளித்தார். சட்டத்தின் ஷரத்துகள் பின் வருமாறு:—

1. இச்சட்டத்திற்கு 1940 ம் வருஷத்திய தொழிற்பெயர்ப் பதிவுச் சட்டமெனப் பெயர்.

2. வார்த்தைகளின் விளக்கம்

இச்சட்டத்தில் முன்பின் சந்தர்ப்பத்துடன் முரண்படாமல் இருக்கிற இடத்தில் 'பிரிட்டிஷ்' என்ற வார்த்தை ஒரு தனி நபரை யொட்டி உபயோகப்படுத்தப்பட்டிருந்தால் ஒரு பிரிட்டிஷ் பிரஜையைக் குறிக்கும். ஒரு கம்பெனி சம்பந்தப்பட்ட வரையில் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய நாடுகளுக்குள் இணைக்கப்பட்டுள்ள கம்பெனியைக் குறிக்கும். 'தொழில்' என்பது வக்கீல் தொழில், டாக்டர் தொழில் போன்றவைகளையும் குறிக்கும். 'தொழிற் பெயர்' என்பது கூட்டுத் தொழில் அல்லது இதர தொழிலுக்கு வைத்து நடத்தப்படும் பெயரையும் விலாசத்தையும் குறிக்கும். டைரக்டர் அல்லது செக்ரடரி ஸ்தானத்தில் இருந்து வேலை பார்ப்பவர்கள் வேறு பெயர்களால் அழைக்கப்பட்ட போதிலும் 'டைரக்டர்' அல்லது 'செக்ரடரி' யென்றே கருதப்படுவார்கள். லாபத்திற்காகத் தொழில் செய்யும் நோக்கத்துடன் கூட்டாகச் சேர்ந்துள்ள இருவரோ அதற்கு மேற்பட்டவர்களோ அல்லது ஒருவரோ அதற்கு மேற்பட்டவர்களோ ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட கம்பெனிகளோ, இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கம்பெனிகளோ சேர்ந்த, இணைக்கப்படாத கூட்டமைப்பை 'பர்ம்' (firm) என்று சொல்லலாம்.

'அந்நிய பர்ம்' என்பது பிரதானமான தொழில் செய்யும் இடத்தை பிரிட்டிஷ் சாம்ராஜ்ய நாட்டுக்குள் இல்லாமல் அந்நிய நாட்டில் வைத்துக்கொண்டு காலனியில் தொழில் நடத்திவரும் ஒரு பர்மையோ, தனி நபரையோ அல்லது ஒரு கம்பெனியையோ குறிக்கும்.

'முழுப் பெயர்' என்பது ஒரு நபரின் எந்த முழுப் பெயரை எல்லோருக்கும் பொதுப்படையாகத் தெரியுமோ அந்தப் பெயரைக் குறிக்கும். கீழ்க்கண்ட விவரங்களும் அந்த வார்த்தைக்குள்ளடங்கும்.

(அ) ஒரு சீனராயிருக்கும் பட்சத்தில் அவளுடைய "செ" முழுப்பெயரும் அவருக்குள்ள சொந்த முழுப் பெயர்களும்; (ஆ) ஒரு இந்தியராயிருக்கும் பட்சத்தில் அவருடைய பெயரும் அவருடைய குடும்பப் பெயரும் (ஏதாவதிருந்தால்) அவருடைய தகப்பனர் பெயரும், அல்லது அன்னருடைய குடும்பப் பெயரும், முழுவதுமோ அல்லது குறிப்பெழுத்துக்களாலோ தலைப்பெயர்களும்; (இ) இந்தியரும் சீனருமல்லாத ஓர் மலாய்க்காரராகவோ அல்லது இதர ஆசியாக்காரராகவோ இருக்கும் பட்சத்தில் அவருடைய பெயரும், அவருடைய தந்தையின் பெயரும்; (ஈ) இதைத் தவிர வேறு நிலைமைகளில் குடும்பப் பெயர் அல்லது இறுதிப் பெயரும் (முழுவதும்) தலைப்பெயர்களும் (முழு உருவத்திலோ அல்லது தலைப்பெழுத்துகளிலோ):

இந்தச் சட்டத்தில் 'முந்திய பெயர்' எனக் குறிப்பிட்டிருப்பது இயற்கையான பிரிட்டிஷ் பிரஜைகள் சம்பந்தப்பட்ட வரையில் அவருக்கு 21 வயது முடியு முன் பெயர் மாற்றப்பட்டிருந்தாலோ அல்லது வழக்கத்திலிராமற் போயிருந்தாலோ அப்பெயரையும், விவாகமான ஒரு பெண் சம்பந்தப்பட்ட வரையில், விவாகத்திற்கு முன் அவளுக்கு என்ன பெயர் இருந்ததோ அதையும் குறிக்காது.

இச்சட்டத்தில் 'பெயர் மாற்றம்' எனக் குறிப்பிடப்பட்டிருப்பது இயற்கையான பிரிட்டிஷ் பிரஜைகளாயின், அவர் 21 வயதாவதற்கு முன் மாற்றிக்கொண்ட பெயரைக் குறிக்காது.

'தனி நபர்' (individual) என்றால் இயற்கையான ஒரு தனிப்பட்ட மனிதனையன்றி கம்பெனியைக் குறிக்காது. 'நபர்' என்பது கம்பெனியையும் குறிக்கும், 'விதிக்கப்பட்டது' என்றால் இச்சட்டத்தை அனுசரித்துச் செய்யப்பட்ட விதிகள் அல்லது கட்டளைகளால் விதிக்கப்பட்டதென்பதே அர்த்தமாகும்.

(தொடரும்.)

### தமிழ்நாடு காரியக் கமிட்டிக் கூட்டம்

தமிழ்நாடு காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம் 30-ந்தேதி சனிக்கிழமை காலை 10-மணிக்கு சென்னையில் கூடும்.

# நோட்டீஸ்

## தேவகோட்டை
## டி. மு. கோர்ட்டு

O. S. No 196 of 1940.

திருவாங்கூர் நாஷனல் and கொயிலோன் பாங் லிமிடெட் (காரைக்குடி பிராஞ்சு) ஷை பாங்குக்கு மதராஸிலிருக்கும் அபீஷியல் லிகுடேட்டர்ஸ் மூலம். } வாதி

காரைக்குடியி லிருக்கும் அளகப்ப செட்டியார் குமாரர் A. M. K. M. A. L. ராமசாமி செட்டியார். } பிரதி வாதி

வாதி பாங்கில் பிரதிவாதி over draft account ஏற்படுத்திக் கொண்டு பற்று வரவு செய்து வந்ததில் ஏற்பட்ட பாக்கிக்காக வாதி ஷை கோர்ட்டில் ஷை நிம்பரில் பிராதுசெய்து பலதடவை பிரதி வாதிக்கு சம்மன் பேரய் சார்வாகாமல் கடைசியாக 5-12-40உக்கு வாய்தா ஏற்பட்டிருக்கிறது. ஷை தேதியில் பிரதிவாதி ஷை கோர்ட்டில் ஷை நிம்பரில் நேரிலாவது வக்கீல் மூலமாவது ஆஜராகி அவருடைய எதிர்வாதத்தை தெரிவித்துக் கொள்ளவும். தவறினால் ஷை நம்பர் பிராது exparte ஆகத் தீர்மானிக்கப்படு மென்பதை இதனுல் அறிவித்திருக்கிறது.

S. லெக்ஷிமிரதன் பாரதி,

தேவகோட்டை } வாதியின்
17—11—40 } அட்வகேட்.






"நான் இதுவரையில் பணக்காரர்கள் மட்டும் தான் பணம் சேர்க்கக்கூடும் என்று எண்ணி இருந்தேன். ஆனல் இப்பொழுது நானும் சேர்த்து வருகிறேன்; அது போலவே நீயும் சேர்த்துவைக்கக் கூடும். நீ தபால் ஆபீஸுக்குப் போய் அங்கு இலவசமாகக் கிடைக்கும் டிபென்ஸ் ஸேவிங்கு சர்டிபிகேட் அட்டை ஒன்று வாங்குவதே முதல் காரியம். பிறகு அவ்வப்போது உனக்கு சௌகர்யம் உள்ள காலங்களில், உன் இஷ்டம்போல் உன்னுல் இயன்ற அளவுக்கு டிபென்ஸ் ஸேவிங்கு தலைகளை வாங்கு. அவைகளை உன்னிடம் உள்ள அட்டையில் காணும் கட்டங்களில் ஒட்டிவிடு. இவ்வாறு 40 தலைகள் ஒட்டியதும் உன் அட்டை பூர்த்தியாகிறது. பின்னர் எந்த போஸ்டாபீசில் கொடுத்தாலும் இதற்கு பதிலாக ஓர் பத்து ரூபாய் டிபென்ஸ் ஸர்டிபிகேட் உனக்குக் கிடைக்கும். இந்த பத்து ரூபாய் பத்து வருஷத்தில் ரூ. 13-9-0 மதிப்புள்ளதாகப் பெருகி உனக்கு ஆதாயத்தைத் தரும். இதற்கு வருமான வரி கிடையாது."



"பேஷ்! இது ஒரு நல்ல யுக்திதான். நானும் இம்மாதிரியே மிச்சம் பிடித்து பணம் சேர்க்கலாம். சந்தேகமில்லாமல் இது யாருக்கும் சுலபமாக பணத்தை மிச்சம் பிடித்து சேர்க்க சௌகர்யமுள்ள ஓர் மேன்மையான வழியாகும்."

**மிகச்சௌகர்யமுள்ளதும், பத்திரமுள்ளதுமான இந்தியா**
**டிபென்ஸ் ஸேவிங்கு ஸர்டிபிகேட்டு**
**களை வாங்குங்கள்**

GI-TN-11

## மதிப்புரை

### திருக்குறள் நாட் குறிப்பு 1941.

தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்பட்ட 1941-ம் ஆண்டு நாட் குறிப்பு கிடைக்கப் பெற்றோம். வழக்கம் போல் நாள் ஒன்றுக்கு ஒரு குறளாகக் கருத்துரையோடு பதிப்பித்திருக்கிறார்கள். அவைகளுக்குப் பின் இவ்வாண்டு புதிதாக மூவர் தேவாரங்களிலிருந்து தெரிந் தெடுக்கப்பட்ட வசனங்களைச் சேர்த்திருக்கிறார்கள். பஞ்சாங்கம், விடுமுறை நாட்கள், விசேட நாட்கள், முதலியன காணப்படுகின்றன. நல்ல தாள். முழு காலிகோ பைண்டு. முகப்பட்டையில் திருவள்ளுவர் படம் திகழ்கிறது. திருக்குறளையும் தேவாரத்தையும் கற்க இது சிறந்த சாதனம். சாதா டைரியின் விலை 0—5—6. பென்சில், ரப்பர் நாடாவுடன் கூடியது. 6½ அணா

O

### TAMIL LEXICON Supplement

சென்னை சர்வகலாசாலையார் வெளியிட்டிருக்கும் தமிழ் அகராதியின் கடைசி—மூன்றாவது—அனுபந்தம் வெளியாகியிருக்கிறது. இதில் 'தெ' முதல் 'க்ஷ' வரையுள்ள எழுத்து வரிசையிலுட்பட்ட சொற்களும் அவற்றின் உச்சரிப்பு, பொருள், உபயோகங்களும் விளக்கப்பட்டிருக்கின்றன. இறுதியில், அனுபந்தம் முழுமைக்குமுள்ள பொருள் அடக்க அட்டவணை, முன்னுரை, அனுபந்தத்தில் புதிதாக ஆளப்பட்ட நூல்களும் அவற்றின் குறியீடு, பதிப்பு முதலிய விவரங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. 116 பக்கங்களுள்ள இவ்வனுபந்தத்தின் விலை ரூபா 1-4-0 தான். வழக்கம்போல் நல்ல காகிதத்தில் சிறந்த முறையில் அச்சிடப்பட்டிருக்கிறது. அனுபந்தத்தின் மூன்று பகுதிகளிலுமாகச் சேர்ந்து மொத்தம் சுமார் 15,000 வார்த்தைகள் தொகுக்கப்பட்டிருக்கின்றன. அனுபந்தத் தொகுப்புக் கமிட்டிக்கு ராவ்பகதூர் கே. வி. கிருஷ்ணசாமி ஐயர் பி. ஏ., பி. எல். அவர்கள் தலைவர். ராவ்சாகிப் எஸ். வையாபுரிப் பிள்ளை பி. ஏ., பி. எல். அவர்கள் ஆசிரியர். இக்கமிட்டியார் இதைத் தொகுப்பதற்கு எடுத்துக்கொண்ட பெரு முயற்சி முகவுரையில் குறிக்கப்பட்டிருக்கிறது. இவ்வகராதியைத் தொகுத்ததன் மூலம் இக்கமிட்டியார் தமிழ் மொழிக்குப் புரிந்திருக்கும் சேவை என்றும் நின்று பயனளிப்பதாகும். கிடைக்குமிடம்:— M. R. அப்பாத்துரை, 57 ஆண்டர்ஸன் வீதி, ஜி. டி. சென்னை.

O

### The Indian Messenger

கல்கத்தா சதாரன் பிரம்ம சமாஜத்தார் வெளியிடும் இவ்வாங்கில வாரப் பத்திரிகையின் விசேஷ மலர் ஒன்று வரப்பெற்றோம். 1833, செப்டம்பர் 27உ காலஞ்சென்ற ராஜ ராம் மோகன் ராய் அவர்களுடையவும், 1919 செப்டம்பரில் காலஞ்சென்ற சிவநாத் சாஸ்திரி அவகளுடையவும் ஞாபகார்த்த வெளியீடாகவும், 1840 அக்டோபரில் ஜனித்த பிரதாப் சந்திர மஜூம்தார் அவர்களின் நூறாவது ஜனன தின வெளியீடாகவும் மிளிருகின்றது. ஸ்ரீ அமியகுமார் ஸென் எம். ஏ., இதன் ஆசிரியர். இந்த விசேஷ மலரில், சிகாகோ உலகமத மகாநாட்டில் ஸ்ரீ பிரதாப் சந்திரர் நிகழ்த்திய விரிவுரையும், பிரம்ம சமாஜத்தின் வரலாறும், அதன் கொள்கைகளின் சிறப்பும் பற்றிய பல கட்டுரைகள் காணப்படுகின்றன. நவ பாரதத்துக்குரிய கல்வி யென்பது பற்றி டாக்டர் ஜே. எம். குமரப்பா ஒரு கட்டுரை வரைந்திருக்கிறார். பம்பாயில் மதுவிலக்குப் பரீட்சை தோல்வியுற்றதைப்பற்றி ஸ்ரீ கணேச சந்தவர்க்கார் எழுதியிருக்கின்றார். மகாத்மா காந்தியின் உபதேசங்களை ஏசுநாதருடைய போதனைகளுடன் ஒப்பிட்டு அவை எவ்வாறு இசைந்து நிற்கின்றன என்பதை டாக்டர் எச். ஸி. முக்கர்ஜி ஒரு கட்டுரை மூலம் விளக்குகிறார். இந்த சகாப்தத்தை ராம் மோஹன் ராய் சகாப்தம் என அழைக்க வேண்டுமென்று ராய் பகதூர் புரபஸர் ருசிராம் சஹானி தமது கட்டுரை மூலம் கோருகிறார். இதில் ராஜாராம் மோஹன் ராய் தமது அருமுயற்சியால் நாட்டுக்குச் செய்துள்ள பேருழியங்கள் பல விளக்கப்பட்டிருக்கின்றன. அவரது முயற்சியால் நம் நாட்டில் ஏற்பட்ட பல சீர்திருத்தங்களை டாக்டர் ஜே. கே. மசும்தார் தமது கட்டுரையில் விரிவாக விளக்கியிருக்கின்றார். சுமார் 50 பக்கங்கள் கொண்ட இம்மலரின் விலை அணா 4. கிடைக்கு மிடம்: Sadharan Brahmo Samaj. 211, Cornwallis St., Calcutta.





### பம்பாயில் கடை குமாஸ்தாக்கள் சட்டம்

நவம்பர் 14உ இரவு முதல் பம்பாயில் கடை குமாஸ்தாக்கள் சட்டம் அமுலுக்கு வந்திருக்கிறது. வர்த்தக ஸ்தாபனங்களில் வேலை செய்யும் இரண்டு லட்சம் ஊழியர்களின் வேலை நேரங்கள் அன்று முதல் ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கின்றன. சட்டப்படி இவ்வூழியர்களுக்கு வாரத்துக்கு ஒரு நாள் விடுமுறை கிடைக்கும். ஆரம்பமாய் பம்பாய் நகரிலும், புனா, ஆமதாபாத், ஷோலாப்பூர் இந்நகரங்களிலும் இச்சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. இதை அமுல் நடத்தும் பொறுப்பு கார்ப்பரேஷனுடையது. இதை நிறைவேற்றிவைத்தது காங்கிரஸ் மந்திரிகளாகும்.

---

கவர்னர் யுத்த நிதிக்காக ரூ 10,000 தரவேண்டு மென கமிஷனர் செய்த சிபார்சை சென்னைக் கார்ப்பொரேஷன் நிதிக் கமிட்டி ஏற்றுக்கொண்டது.

## கைத்தொழில் ஸ்தாபனங்கள்

[3-ம் பக்கத் தொடர்ச்சி]

ஆனல் நம் நாட்டு முதலாளிகள் உலகப் பொருளாதார மூலதனத் தலைவர்கள் முன்பு எம்மட்டு? மார்கன்கள், மெல்லின்களுடன் இவர்களை ஒப்பிட்டுப் பார்க்க முடியாது.

ஜான் டி. ராக்பெல்ல (மூத்தவர்) ரும், ஜே. என். டாடாவும் 1839ல் தான் பிறந்தனர். இடையிற் சென்ற ஒரு நூற்றாண்டில் அமெரிக்காவிலும் இந்தியாவிலும் பொருளாதார நிலை ஒரே ரீதியில் அபிவிருத்தியுற்றிருக்கிறது. நிர்வாகம் ஒரு சிலருடைய ஆதிக்கத்திலிருந்து வருவதால், அவர்களிடையே சமாதான ரீதியில் ஒத்துழைப்பு இருந்துவருவதாகக் கருதுவதற்கில்லை. ஓரிடத்தில் ஒத்துழைப்பு இருக்கும்; மற்றோரிடத்தில் தகராறு இருக்கலாம். டிரஸ்டுகளுக்கு இடையேயுள்ள போட்டியைப்பற்றி ஒரு தனி வியாசம் எழுதவேண்டும். நிர்வாகிகளின் தொகையைக் குறைத்துக் கொண்டு வரவே முயற்சி நடக்கிறது.

டாட்டா இரும்பு எஃகுக் கம்பெனியின் வருஷ லாபம் மட்டும் பீஹார் சர்க்காரின் மொத்த வருமானத்துக்குச் சமமாக இருக்கும். எனினும் அது டாட்டா ஸ்தாபனங்களில் ஒன்றே ஒன்றுதான்! பீஹார் சர்க்காரின் பொருளாதாரத்தின் மீது நமக்கு ஜனநாயக ஆதிக்கம் இருக்க வேண்டுமென்று கோருகிறோம்; ஆனல் கைத்தொழில்களை அவற்றின் 'மன்னர்'களிடமே விட்டுவிடலாமா? இந்த ஆதிக்க உரிமை மிகுந்த கட்டுப்பாட்டுக்குள் இருக்கிறது. மகன் தந்தைக்குப் பின் உரிமை பெறுகிறான். எல்லா தேசங்களிலும் இம்முறைதான் பொதுவாக இருக்கிறதென்றாலும், இந்தியாவில் இது அதிகமாக இருக்கிறது. பிள்ளைகளும், தாயாதிகளும்— ரொம்ப தூரம் போனல் சமுதாயத்தினரும்—மட்டுமே உயர் பதவிக்கு வருகிறார்கள். புதிதாக வேறு யாரும் இடம் பெறுதல் நடவாத காரியம்.

இந்தக் கைத்தொழில் தலைவர்கள், திறமைசாலிகளாகவும், நாணயஸ்தர்களாகவும், கஷ்டப்பட்டு உழைப்பவர்களாகவும், பொதுநல விருப்புள்ளவர்களாகவும், இருந்தாலும், முதலாளித்துவச் சட்டத்தையும் தர்க்க சாஸ்திரத்தையும் பின்பற்றி தங்கள் நலத்துக்காகவே உழைக்கிறார்கள். ஆனல், தங்கள் சுயநலத்துக்காக உழைப்பதன் மூலம் பொது நன்மைக்கும் உழைப்பதாக அவர்கள் வாதாடலாம். இதை நாம் ஒப்புக்கொள்ள முடியுமா?

தூரதிருஷ்டியும், திறமையும், நிபுணத்துவமும் உள்ளவர்களிடமல்ல இன்று கைத்தொழில் அபிவிருத்தி யிருப்பது; ஆனல் ஒரு கூட்டம் பணக்கார முதலீட்டுக் காரர்களிடமே அது சிக்கியிருக்கிறது. கைத்தொழில்களுக்குப் பணம் கொடுப்பது, அவற்றின் நிர்வாகத்தைத் தம் ஆதிக்கத்திற்குட்படுத்துவது இவைதான் அவர்களின் முக்கிய வேலைகள். தனி நபர்களுடைய கட்டுப்பாடற்ற ஆதிக்கத்தின் கீழ் அவற்றை விட்டு வைக்க முடியாது. அவை ஜனநாயக முறையில் அமைக்கப்பட்டு, நிர்வகிக்கப்பட வேண்டும்.

ஆனல் அரசாங்கமே ஜனநாயக முறையில் அமைக்கப்படா திருப்பது வரை, அவ்வாறு கைத்தொழில் நிர்வாகத்தை அமைக்க வேண்டுமென்று வற்புறுத்துவதில் அர்த்தமில்லை. ஆகையால் இப்போதிருக்கும் ஆட்சி முறை நீடித்திருப்பது வரை, பல தலைமுறைகளாக நமது தேச பக்தர்கள் செய்துவந்த ஊழியத்தை சர்க்கார் வசம் கொடாமல், சுதேசி முறையிலேயே நிர்வகித்துவர வேண்டும்.

நாம் சுதந்திரம் பெற்ற பிறகு, இந்தக் கட்டுரையில் எழுப்பப்பட்ட பிரச்னைகள் முக்கியம் பெறும். திட்டம் எதுவும் இல்லாமல், தனிப்பட்டவர்களுக்குச் சொந்தமாக இருப்பது வரை இந்தியப் பொருளாதாரம் முன்னேற முடியாது. சர்க்கார் உதவி வேண்டுமென்று எல்லோரும் கோருகிறார்கள். ஆனல், அவ்வாறு சர்க்கார் உதவிபெற்றால், அவை கோடியாகப் பெரும்பாலான மக்களுடைய நன்மைக்கு உகந்ததாக இருக்க வேண்டாமா? இனி ஏற்படப் போகும் சுதந்திர ஆட்சியில், நமது கைத்தொழில்களை தனி நபர்களுடைய நிர்வாகத்தில் விட்டு வைக்க முடியாது. அவை ஜனநாயக முறையில் அமைக்கப்பட்டு, ஜனசமூக நிர்வாகத்திற் குட்படுத்தப்பட வேண்டும்.



## மறைந்திருக்கும் புதையல்கள்

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

அந்த ஏரியில் உள்ள ஐஸ்வரியத்தைக் கண்டு பிடிப்பதற்காக ஸ்பானியர்கள் முதலில் முயன்றனர். 200 அடிக்குக் கீழ் வரையில் ஜலம் இருப்பதையும் கீழே சதுப்பு அதிகமாக இருப்பதையும் கண்டு பிடித்தனர். இன்னொருவர் அதிலிருந்து ஜலத்தை வெளியே இறைக்க முயன்றார். அவ்விதம் செய்து 40 பவுண்டு எடையுள்ள தங்கத்தைக் கண்டுபிடித்தார். மற்றோர் ஸ்பானிய எஞ்சினியர் மேலும் அந்த ஏரியின் ஜலத்தை வற்றவைத்தார். அப்பொழுது கொஞ்சம் தங்கமும், சில நவரத்தினங்களும் கிடைத்தன. இந்த ஏரியின் ஜலம் முழுவதையும் வற்ற வைத்து மேலும் புதையுண்டு கிடக்கும் பொருட்களை எடுக்க மற்றோர் கம்பெனியார் நடவடிக்கை எடுத்துக் கொண்டார்கள். அதற்காக ஏராளமான ரூபாய் செலவாயிற்று. மேலும் மேலும் மூலதனம் போடும்படியாக நேரிட்டது. இவ்விதம் முயற்சியில் இறங்கிய அக் கம்பெனியாருக்கு தங்க ஆபரணங்களும், வேறு பல உயர்தரமான கற்களும் அந்த ஏரியிலிருந்து கிடைத்தன. 1914ல் மூண்ட யுத்தத்தின் காரணமாக இந்த வேலை அப்படியே நிறுத்தப்பட்டுவிட்டது. அதற்கிடையில் மறுபடியும் அந்த ஏரியில் ஜலம் ஊற்றெடுத்து நிறைந்துவிட்டது. கனமானதால் தங்கமெல்லாம் அதன் அடியில் அமுங்கிக் கிடக்கவேண்டுமென்று யூகிக்கப்படுகிறது.

டிரினிடாட்டில் அடிக்கடி உண்டாகும் மண் சரிவின் மறைவில் புதையல் இருப்பதாகவும் கூறப்படுகிறது. அந்தப் பிரதேசங்களில் பிரயாணம் செய்வது மிகவும் பயங்கரமானதாகும். ஏனெனில், மனிதனைத் தின்னும் ஓர் வகையான ராக்ஷஸ நண்டுகள் உண்டு. அவை, அங்கு ஆராய்ச்சி செய்யப் போகிறவர்களைத் தாக்கிக் கொன்றுவிடுவதுமுண்டு.

இவ்விதம் உலகத்தின் பல இடங்களில் புதையல்கள் இருந்துவருகின்றன. அவைகளைக் கண்டுபிடிக்கத் தீவிரமாக முயற்சி செய்யப்பட்டுவருகின்றது.

---

இந்தியாவில் வருஷத்தில் 25 ஆயிரம் டிரக்குகள் (மோட்டார்கள்) இறக்குமதியாவதாகவும் இவற்றில் 16 ஆயிரம் அமெரிக்காவிலிருந்து வருவதாகவும் ராஜாங்க சபையில் சொல்லப்பட்டது.



### பிற்பட்ட ஜாதியாருக்குச் சலுகை

படிப்பில் பிற்பட்ட சாதியாருக்கு சர்க்கார் உத்தியோகம் பெறுவதற்கான வயதை 25 லிருந்து 30 ஆக மத்திய மாகாண சர்க்கார் உயர்த்தியிருக்கின்றனர். மனுவுடன் அனுப்பவேண்டிய கட்டணத்தையும் செலுத்தவேண்டாமெனச் சொல்லியிருக்கின்றனர்.

### ஒரு ரூபாய் நோட்டுகள்

இந்தியா சட்ட சபையில் கேட்கப்பட்ட கேள்வி யொன்றிற்குப் பதிலளிக்கையில், அக்டோபர் 25உ வரையில் செலாவணியிலிருந்த ஒரு ரூபாய் நோட்டுகளின் மொத்தத்தொகை 646 லட்சமென்று குறிப்பிடப்பட்டது.



## திருப்பத்தூர் தாலுகாவில் விலைவாசிகள் நிர்ணயம்

திருப்பத்தூர் தாலுகா விலை நிர்ணயக் கமிட்டி 14—11—40ல் நிர்ணயித்த விலைகளின் ஜாப்தா:

| | | |
|---|---|---|
| அரிசி முதல்தரம் நெல்லூர் சம்பா | ரூ 1க்கு | 4½ படி |
| அரிசி மல்லிகை சம்பா | ,, | 4½ ,, |
| அரிசி 2 வதுதரம் (பெருவட்டு கார் அரிசி) | ,, | 5½ ,, |
| ரெங்கூன் அரைக் குருணை | ,, | 4½ ,, |
| ,, கால் குருணை | ,, | 5½ ,, |
| ,, காலேயரைக்கால்குருணை | ,, | 5 ,, |
| கேப்பை | ,, | 10 ,, |
| பருப்பு முதல்தரம் | ,, | 4 to 4½ ,, |
| உளுந்தம் பருப்பு | ,, | 3 to 3½ ,, |
| பாசிப்பருப்பு | ,, | 4½ ,, |
| கடலைப்பருப்பு | ,, | 4½ ,, |
| கடலை | ,, | 4½ ,, |
| கொள்ளு | ,, | 7 ,, |
| உப்பு | ,, | 10 ,, |
| மல்லி | ,, | 7 ,, |
| பழுப்பு சீனி | வீசை 1க்கு ரூ | 0-8-0 |
| சர்க்கரை | ,, | 0-3-3 |
| மா சீனி | ,, | 0-8-0 |
| அஷ்டகிராம் சீனி | ,, | 0-6-9 |
| மிளகாய் வத்தல் சம்பா | ,, | 0-8-0 |
| ,, குண்டு | ,, | 0-7-6 |
| தீப்பெட்டி 40 குச்சி பெட்டி | 1க்கு | 0-0-3 |
| திருப்பூர் 4 முழம் வேஷ்டி | ,, | 0-8-0 |
| ஈரோடு 4 முழம் வேஷ்டி | ,, | 0-7-0 |
| மண்ணெண்ணெய், (குரங்கு மார்க்கு) டின்னுடன் | ,, | 4-3-0 |

### மலேயா ஏஜண்ட் ஜெனரல்

இந்திய சர்க்கார் கல்வி, சுகாதார நிலம் இலாகா டிப்டி காரியதரிசி ஸ்ரீ அபிமால் தத்தா ஐ. ஸி. எஸ். மலேயா ஏஜண்ட் ஜெனரலாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

## நோட்டீஸ்

இதனல் சகலமானவர்களுக்கும் தெரிவிப்பது என்னவென்ருல்:—

6-6-38வுக்கு முன் எங்கள் குடும்ப மானேஜருக இருந்த எங்கள் பிதா ராம. ப. ராம. மு. சுப்பிரமணியஞ் செட்டியார் குடும்ப சொத்துக்களை ஏருளமாக ரூரையாடியும் அழித்தும் வீண்செலவு செய்தும் வெகுவாக சேதப்படுத்தியும் அனுவசியமானதும் கட்டுப்படுத்தாததுமான கடன்கள் வாங்கியதிலிருந்து நாங்கள் ஆதை ஆசேஷபித்து வந்ததில் குடும்பத்தை மானேஜ் செய்ய தான் கட்டோடு லாயக்கில்லை என்பதை ஷையார் பூரணமாக ஒப்புக்கொண்டு எங்களையே குடும்ப மானேஜ்மெண்டு செய்யும்படிக்கும் அதில் ஷையார் எவ்விதத்திலும் பிரவேசிப்பதில்லை என்றும் மற்ற விபரங்களும் கண்டு ஒரு ரிஜிஸ்டர் எக்ரிமெண்டு 6-6-38வுயில் பிரப்பிவித்தும் எங்களில் 3வது நபருகிய M. S. இராமநாதன் செட்டியார் பேருக்கு ஜெனரல் பவரும் ஷை தேதியிலேயே கொடுத்திருப்பதில், ஷை எக்ரிமெண்டையும் பவரையும் எவ்விதத்திலும் ரத்துச் செய்கிறதில்லை என்று கண்டிருப்பதாகவும் ஷை எக்ரிமெண்டுப் படிக்கும் பவர் தஸ்தவேசுப்படிக்கும் ஷை சுப்பிரமணியஞ் செட்டியார் மானேஜர் ஸ்தானத்திலிருந்து விலகி ஷை தேதி முதல் நாளதுவரை நாங்களே சகல குடும்ப காரியங்களையும் கோர்ட்டு நடபடிக்கைகளையும் நடத்திவந்திருப்பதாகவும் அநேக பொறுப்புகள் (Liabilities and commitments) நாங்கள் ஏற்றுக் கொண்டிருப்பதாகவும் ஷை எக்ரிமெண்டு and பவர் விஷயமாக 28–7–38வுயிலேயே "ஹிந்து" பேப்பரில் பிரசுரித்தது சகல ஜனங்களுக்கும் நன்ருய்த் தெரியுமென்றும் இப்படிக்கிருக்க ஒப்பந்தத்துக்கும் சட்டத்துக்கும் நியாயத்துக்கும் நடபடிக்கைக்கும் விரோதமாக ஷையாருடைய அனுவசிய செலவுகளுக்கு அதிகப்பணம் எவ்விதமாகவாவது கைப்பற்ற வேண்டுமென்ற நெட்ட எண்ணத்துடன் ஷை சுப்பிரமணியஞ் செட்டியார் ஷை 6-6-38வு எக்ரிமெண்டையும் பவர் தஸ்தவேசையும் ரத்துச் செய்திருப்பது போல் பேப்பரில் போட்டிருப்பதாக தெரியவருகிறது. அவ்விதம் ரத்துச் செய்ய அவருக்கு யாதொரு பாத்தியமுமில்லை. ஏற்கனவே கண்டபடி ஷை எக்ரிமெண்டு பவர் தஸ்தவேசுகளிலும் ரத்துச் செய்யத்தக்கதில்லை என்றும் அவருக்கு கடன் வாங்க யாதொரு அவசியமும் பாத்தியமும் கிடையாதென்றும் கண்டிருக்கிறது. நாங்களே குடும்ப மானேஜருக இருக்கிருேம். ஷையார் குடும்ப மானேஜரே இல்லை; குடும்ப சொத்துக்களிலாவது நடபடிக்கைகளிலாவது எதிலும் அவர் பிரவேசிக்கத்தக்கதுமில்லை. மீறி ஷையாருடன் ஏதாவது நடபடிக்கை வைத்துக் கொண்டிருந்தவர்களுக்கும் இனி வைத்துக் கொள்பவர்களுக்கும் யாதொரு பாத்தியமும் சித்திக்கத்தக்கதில்லை என்றும் வீண் நஷ்டமடைய வேண்டியதாக நேரிடுமென்றும் இதின் மூலம் தெரிவித்துக் கொள்கிருேம்.

M. S. முத்துராமன் செட்டியார்,
M. S. சோக்கலிங்கம்செட்டியார்,
M. S. இராமநாதன் செட்டியார்,

19—11—40. பூலாங்குரிச்சி.

### சுயராஜ்ய பவனம் கட்ட ரூ 20000

அகோலாவில் பிரபல பாங்கரான ஸ்ரீ ராமல் பிரசாத் பாரிசா அகோலாவில் சுயராஜ்ய பவனம் கட்டுவதற்காக ரூ. 20,000 நன்கொடை அளித்திருக்கிருர்.

## மூவர் ஒப்பந்தத்தில் மேலும் மூன்று நாடுகள்

### ஜேர்மன் வலையில் விழுந்தன

அச்சு நாடுகளும் ஜப்பானும் செய்துகொண்டுள்ள ஒப்பந்தத்தில் ஹங்கேரியும், ருமேனியாவும், ஸ்லவேகியாவும் சேர்ந்துவிட்டன.

### அடுத்தது பல்கேரியாவா?

மேற்கண்ட உடன்படிக்கையில் அடுத்தபடியாக பல்கேரியா கையெழுத்திடுமெனச் சொல்லப்படுகிறது.

### துருக்கியை இழுக்க முயற்சி

துருக்கியையும் இந்தப் புதிய ஏற்பாட்டுக்கு உட்படுத்த ஜெர்மன் இத்தாலி தேசங்கள் முயற்சிக்கின்றனவாம். துருக்கியிடம் இந்த முயற்சி பலிக்காதாம்.

### யுத்தம் பரவாமலிருக்க ஜேர்மன் முயற்சி!

சென்ற சில தினங்களில் ஜெர்மன் சர்க்கார் ராஜீயத் துறையில் எடுத்துக் கொண்டுவரும் நடவடிக்கைகளின் நோக்கம் ஐரோப்பிய யுத்தம் பரவாமல் தடுப்பது தான் என்று வான் பேபன் துருக்கித் தலைவர்களிடம் தெரிவித்தாராம்.

### ஸ்லவேகியாவில் நாஸி முறை

மேற்குறிப்பிட்ட ஒப்பந்தத்தில் ஆருவது நாடாகக் கையெழுத்திட்ட ஸ்லவேகியாவின் பிரதம மந்திரி "ஸ்லவேகிய சர்க்கார் தங்களுடைய அரசாங்கத்தையும், சமூக முறையையும் நாஸிக் கொள்கைகளின்படி திருத்தியமைப்பதன் மூலம் இனி அமுலுக்கு வரவிருக்கும் புதிய ஏற்பாட்டில் ஒத்துழைப்பார்கள்" என்று தெரிவித்தார்.

—

### கிரீசுக்கு ஆயுதங்கள்

விமான, கடல், நிலமார்க்க மூலம் பிரிட்டன் கிரீசுக்கு பீரங்கிகளையும் குண்டுகளையும் அனுப்பிவருகிறது.

—

## கொழும்புச் செய்திகள்

### தனவைசிய இளைஞர் சங்கம்

நவம்பர் 14வு பகல் 2 மணிக்கு கொழும்பு தனவைசிய இளைஞர் சங்க ஆதரவில் பண்டித ஜவஹர்லால் நேரு விழா, புதுக் கதிரேசன் கோவில் மேல்மாடியில் கொண்டாடப்பெற்றது. நேரு கழகத் தலைவர் எம். ஆர். சேதுராமன் செட்டியார் விழாவிற்குத் தலைமை வகித்தார். ஆ. வி. க. சொர்ணநாதன், வேலாயுதம் முதலியோர் பேசியதும் கூட்டம் முடிவுற்றது. (ஒரு நிருபர்)

### "காந்தீயம் இன்றைய உலகிற்கு உகந்ததா?"

10-11-40 ஞாயிற்றுக்கிழமை யன்று நேரு கழகத்தின் ஆதரவில் மேற்படி கழக மண்டபத்தில் "காந்தீயம் இன்றைய உலகிற்கு உகந்ததா?" என்பதுபற்றி ஓர் விவாதம் நிகழ்ந்தது. கழகத் தலைவர் எம். ஆர். சேதுராமன் செட்டியார் தலைமை வகித்தார். திருவாளர்கள் எஸ். கணபதி பிள்ளை, சி. கந்தையா, பி. ஆர். ராமநாதன் முதலியோர் விவாதத்தில் கலந்து கொண்டார்கள். இறுதியில் "காந்தீயமே இன்றைய உலகிற்கு உகந்தது" என்று தீர்மானிக்கப்பெற்றது.

(ஒரு நிருபர்)

### நேரு கழகத்தில் நேரு ஜெயந்தி

14வு இரவு 8-மணிக்கு கொழும்பு நேரு கழகக் கட்டிடத்தில் பண்டித ஜவஹர்லாவின் 52-வது ஜெயந்தி விழா மிக்க விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. ஏராளமான ஜனங்கள் விஜயம் செய்திருந்தனர். கழகத்தின் உபதலைவர் திரு எஸ். அழகு சுந்தரம் தலைமை வகித்தார். அவ்வமயம் திருவாளர்களான எஸ். நாராயணசாமி, சி. கந்தையா, எம். ஆர். சேதுராமன், இந்திய சேவா சங்கப் பிரதமக் காரியதரிசி பி. டி. தாணுப்பிள்ளை முதலியோர் பண்டித ஜவஹர்லாலின் தியாக வாழ்க்கையைப் பற்றிப் பேசினர்கள்.

(ஒரு நிருபர்)

## நாக்கை அறுத்துக்கொண்டான்

### அண்ணுமலையார்மீது கோபம்!

திருவண்ணுமலையில் மூக்காய பிள்ளை என்பவர் நவம்பர் 22வு மாலை 6-மணிக்கு அண்ணுமலையார் கோவிலுக்குச் சென்று தீபாராதனை நடக்கும்போது எல்லோரும் அரகரா என்று கூப்பிடும் சமயம் கத்தியை எடுத்துத் தனது நாக்கை அறுத்துக் கொண்டார். ரத்தப் பிரவாகம் எடுத்தது. உடனே அவர் அப்புறப்படுத்தப்பட்டு ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டார். தனக்கு வேண்டிய உணவுக்கு வசதி செய்யவில்லையென்று அவர் அண்ணுமலையார் பேரில் கோபப்பட்டு அவ்வாறு செய்தாராம்!

—

### திருவள்ளுவர் நூல் நூற்போர் சங்கம்

(ஒரு நிருபர்)

25-11-40 மாலை 4-மணிக்கு இராமச்சந்திரபுரம் ராமகிருஷ்ண வாலிபர் சங்கச்சார்பில் ஜோதி சங்கக்கட்டிடத்தில் திருவள்ளுவர் நூல் நூற்போர் சங்கம் காரைக்குடி ஸ்ரீ. ஆரு. ஆ. ராம சொக்கலிங்கம் செட்டியார் அவர்களால் திறந்து வைக்கப் பெற்றது. கடவுள் வணக்கம் சிறுமிகளால் பாடப் பெற்றவுடன் காரியதரிசி தலைவர் ஸ்ரீ சொக்கலிங்கம் செட்டியாரவர்களுக்கு ஒரு உபசாரப் பத்திரம் வாசித்துக்காடுத்தார். தலைவர் முன்னுரையாகப் பேசும்போது "தனவைசிய பெண்மணிகள் 50 ஆண்டுகளுக்கு முன் பஞ்சு கொட்டி நூல் நூற்று அந்த நூலை ஹரிஜனங்களிடம் கொடுத்து வேஷ்டி சேலைகள் நெய்து வாங்கி அதற்குக் கூலியாக தானியங்களை கொடுத்து வந்திருக்கிருர்கள். அந்த வேஷ்டியைத் தான் இப்பொழுது கதர் என்று சொல்லுவது. மறைந்து போன அந்த இயக்கத்தை இப்பொழுது நீங்கள் மகாத்மா காந்தி அடிகளின் தூண்டுதலால் ஆரம்பிக்கிறீர்கள். மறைந்து போன பல நல்ல காரியங்களை மகாத்மா நம்மைச் செய்யச் சொல்லுகிருர். ஹரிஜன இயக்கத்துக்குப் புராணங்களில் ஆதாவு இருக்கிறது. அதை எதிர்த்து சில சுயநல வாதிகள் ஆதாரமில்லாமல் ஆர்ப்பாட்டம் செய்கிருர்கள். அதற்கு நீங்கள் செவிசாய்க்கக்கூடாது. மலாயா, பர்மா போன்ற நாடுகளில் தனவைசியர்கள் ஹரிஜனங்களை ஆலயத்தில் அனுமதிக்கிருர்கள். நான் என் வீட்டில் சம பந்தி போஜனம் செய்ய அனுமதித்திருக்கிறேன். இளைஞர்களும் ஆதரிக்கிறீர்கள். வைதீகர்களென்று நினைத்துக் கொண்டு மனப்பால் குடிக்கும் சிலர் எதிர்ப்பு மகாநாடுகள் நடத்துகிருர்கள்; அது பயனடையாது. நூல் நூற்கும் தொழிலும் நெசவு நெய்யும் தொழிலும் நமது பெண்மணிகளுக்கு மிக உபயோகமாக இருக்கும். உபயோகமற்ற பேச்சுப் பேசி காலத்தைப் போக்காமல் உபயோகமான வேலையாக இது இருக்கிறது. இந்த நூல் நூற்கும் வேலையை ஆரம்பிக்க இராம. இளையபெருமாள் அவர்கள் ரூ 101 நன்கொடை அளித்ததை நான் பாராட்டுகிறேன். அவர் ஹரிஜன இயக்கத்திலும் ஆர்வமுள்ளவர் என்பது கேட்டு சந்தோஷப்படுகிறேன்" என்று குறிப்பிட்டார்கள்.

ஸ்ரீ இராம இளையபெருமாள், ஸ்ரீ சுப. சுப்பிரமணியஞ் செட்டியார், ஸ்ரீ அ. அண்ணுமலை, ஸ்ரீமதி அ. மெய்யம்மை முதலியவர்கள் இயக்கத்தை ஆதரித்துச் சொற்பொழிவாற்றினர்கள். தலைவர் முடிவுரையுடன் இரவு 7 மணிக்கு கூட்டம் முடிவுற்றது.

—

### ஜோதி ரோவர் குழு; தேவகோட்டை

20—11—1940 புதன்கிழமை மாலை 5-க்கு காரியதரிசி ஸ்ரீ நா. அண்ணுமலை தலைமையின் கீழ் ஒரு விசேஷக் கூட்டம் நடைபெற்றது. ஷை திரிசாரணர் குழு தலைவர் திரு பழநியப்பன் மலேயா செல்லுவதால் திரு KR. சீனிவாசன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 23-11-40 மாலை 4-க்கு திரு பழநியப்பனுக்கு வழியனுப்பு உபசார விருந்து திரு அரு. வீர. சொக்கலிங்கம் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. திரு. கு. முத்துப்பழநியப்ப செட்டியார் கொடி ஏற்றினர். திரு RM. SM. கதிரேசன், திரு சந்திரமௌலி, திரு கா. அண்ணுமலை முதலியவர்கள் பேசினர்.

## 'உலகம் உய்விக்க ஒரு வழி சொல்லுங்கள்

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

காந்திஜி;- (சிரித்துக்கொண்டே) என் குடும்பம், 35 கோடி மக்களை யுடையது.

தாய்சிதோ:- மனித வர்க்கத்தினர் அனைவருமே தங்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்தான். இப்போது தாங்கள் மிக்க சவுக்கியமாக விருக்கிறீர்கள் எனத் தெரிகிறது. தேக நிலை நன்ருகவிருக்கிறது.

காந்திஜி சிரித்துக்கொண்டே "ஆமாம்; சர்க்கா எனக்கு நல்ல தேக சுகத்தை அளித்து வருகிறது. நான் எதற்கும் கவலைப் படுவதில்லை. எல்லாவற்றையும் ஆண்டவன் தலைமீது சுமத்தி அவன் பாரம் என்று விட்டுவிடுகிறேன்."

—

## நோட்டீஸ்

மதுரையிலிருக்கும் இராமனுதபுரம் அபிஷியல் ரிசீவர் கோர்ட்டு.

—

ஐ. பி. 74,75,76 and 77/35.

(தேவகோட்டை ஐ. பி. நிர் 77/34, 7/35, 17/35 and 10/35)

P. Ry. PL. பழனியப்ப செட்டியார் தேவகோட்டை } இன்சால்வெண்டு.

இதுவரை தங்கள் கடன்களை ருசு செய்து கொள்ளாதவரும் முதல் ஈவு பிரித்துக் கொடுக்கப்பட்டதில் பங்கு எடுத்துக் கொள்ளாதவர்களுமான ஷை எஸ்டேட்டு கிரிடிட்டர்கள் 26-12-1940-வுக்குள் கீழ் கையொப்பமிட்டவர் முன்னல் சரியான முறையில் தங்கள் ஆதரவு தஸ்த்தவேசுகளுடன் ருஜு அவிடவிட்டுகள் தாக்கல் செய்து புரூவ் செய்து கொள்ள வேண்டியது.

R. கிருஷ்ணய்யர்,
அபிஷியல் ரிசீவர்.

மதுரை
25-11-40



Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi, (S. INDIA)

